உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம!

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 22 | ஈசுவர ஹு ஆனிமீ கஉ | 1937 ஹு ஜுன்மீ 14உ | பகுதி 12

## கடவுள் வணக்கம்.

திருவே என்செல்வமே தேனே! வானோர்
செழுஞ்சுடரே! செழுஞ்சுடர் நற்சோதி மிக்க
உருவே என்உறவே ஊனே ஊனின்
உள்ளமே உள்ளத்தின் உள்ளே நின்ற
கருவே கற்பகமே கண்ணே கண்ணிற்
கருமணியே மணியாடு பாவாய் நீகாவாய்
அருவாய வல்வினைநோய் அடையா வண்ணம்
ஆவடுதண் துறையுறையும் அமரர் ஏறே. (1)

வானநாடனே வழித்துணை மருந்தே மாசிலா
மணியே மறைப் பொருளே
ஏனமாய் எயிறு ஆமையும் என்பும்
ஈடுதாங்கிய மார்பு உடையானே
ஆன்நெய் பால்தயிர் ஆட்டுகந் தானே
அன்பனே திருவாவடு துறையுள்
ஆனையே எனை அஞ்சல்என்று அருளாய்
யார்எனக்கு உறவு அமரர்கள் ஏறே. (2)

நாடகத்தால் உன் அடியார் போல்நடித்து நான்நடுவே
வீடகத்தே புகுந்திடுவான் மிகப்பெரிதும் விரைகின்றேன்
ஆடகச்சீர் மணிக்குன்றே இடையறா அன்புஉனக்குஎன்
ஊடகத்தே நின்றுருக தந்தருள் எம்உடையானே. (3)

# அரும்பொருள் விளக்கம்

1. இதனால் பிறவி நோயை நீக்குமாறு இறைவனை வேண்டுகிறார்.

(இ-ள்.) கண்டாரால் விரும்பப்படும் தன்மை வாய்ந்த அழகுப் பிழம்பே! என்னுடைய செல்வமே! தேன் போன்று இனிப்பவனே! தேவர்களால் வணங்கப்படும் பேரொளியே! சுடர் மிகுந்த ஜெகஜ்ஜோதி மயமான திருவுருவமே! என்னுடைய ஆன்ம பந்துவே! சடப் பொருளே! சடப் பொருளில் நிலவும் மனமே! மனத்தினுள்ளே நின்ற கருவே! கற்பகமே! கண்ணே! கண்ணிலுலவும் கருமையான மணியே! கரு மணியில் ஆடும் பாவையே! குளிர்ச்சி பொருந்திய திருவாவடு துறையுள் எழுந்தருளி யிருக்கும் தலைவனே! அருவமாயுள்ள நல்வினை, தீவினை என்னும் இரு நோய் களும் அடையாவாறு நீ என்னைக் காத்தருள்வாயாக. (எ-று.)

மக்கட்கு ஒன்றுயும் உடலும் வேறுபும் இருந்தும் இருவினைகளால் அவர்கள் அவதியுறும்படி பார்த்துக் கொண்டிருப்பது நியாயமா? என்று இப் பாட்டின் வாயிலாக மறைமுகமாகக் கேட்கிறார்.

2. இதனால் ஆண்டவனைத் தஞ்சமளிக்க வேண்டுகிறார்.

(இ-ள்.) மோட்ச லோகத்துக்கு அதிபதியே! வழித்துணைவனாகவும் அருமருந்தாகவும் விளங்குபவனே! மாசு மறுவற்ற மாணிக்க மணியே! நான் மறையின் உட்பொருளாய் விளங்குபவனே! வராகத்தின் வளைந்த பல்லையும், கூர்மத்தின் எலும்பையும் அணியாக அணிந்த மார்பினனே! பசுவின் நெய் பால் தயிர் ஆகியவைகளால் அபிஷேகஞ் செய்யப்படுவதை விருப்பமாக ஏற்றுக் கொள்பவனே! அன்புருவானவனே! திருவாவடுதுறையுள் எழுந்தருளி யிருக்கும் ஆண்டவனே! அமரர்கள் தலைவனே! நீ அல்லாது எனக்கு வேறு யார் உறவு? ஆதலால் தமியனாகிய என்னை அஞ்சேல் என்று அபயங் கொடுத்து ஆட்கொண் டருள்வாய். (எ-று.)

ஆண்டவனையே உயிர்கள் உறவாகக் கொண்டு உய்யவேண்டு மென்பார், "யார் எனக்கு உறவு" என்று அருளினார்.

3. இதனால், கடவுளிடத்து பேரன்புண்டாகச் செய்யவேண்டுகிறார்.

(இ-ள்) அடியேனை உடைமைப் பொருளாகவுடைய பெருமானே! வேஷத்தால், உன்னுடைய உண்மை யடியார்களைப்போல நான் நடித்து இடை நடுவில் மோட்சலோகத்துக்குச் செல்வதற்கு மிகவும் அதிகமாகத் துரி தப்பட்டு நிற்கின்றேன்; (அவ்வாறு நான் ஆஷாடபூதிதனமாக நடந்து கொண்டாலும்) மாற்றில்லாப் பசும்பொன்னில் பதிக்கப்பட்டு சிறந் தொளிரும் நவமணியேலயே! உன்னிடத்தில் இடையறாப் பேரன்பு என் மனதில் ஏற்படும்படி திருவருள் புரிவாயாக. (எ-று)

வெண்ணீறும் ருத்திராக்கமும் மேலுக்கு அணிந்திருந்தாலும் உள்ளே வஞ்சக்கறுப்புடைய ஆஷாடபூதிகள் பலர் மெய்யடியார் நடுவே கலந்து இருந்து, அவர்களைப்போல நடித்து பிறரை ஏமாற்றித் தங்களையும் ஏமாற் றிக் கொள்கிறார்கள் என்னும் உண்மையை விளக்குவார், அப்போலி வேட தாரிகளின் பொய்த்தன்மையைத் தன்மீதேற்றி, "நாடகத்தால் உன் அடியார் போல் நடித்து........விரைகின்றேன்" என்று கூறி யருளினார்.




# மக்களும் பத்திரிகையும்





"பத்திரிகைக்கும் பொது மக்களுக்கும் உள்ள தொடர்பு மிக நெருங்கியது. ஆயினும் சற்று காரியகரமானதல்ல. சூரியனுக்கும் நிலத்துக்கும், தரைக்கும் தண்ணீருக்கும், உடலுக்கும் உயிருக்கும் உள்ள சம்பந்தத்தைப் போல் இதுவும் விவரிக்க முடியாதது. இத் தொடர்பு காலத்திற்கும், இடத்திற்கும், சந்தர்ப்பத்திற்கும் ஏற்ற வாறு வளர்ந்து வந்திருக்கிறது. பத்திரிகை எப்போது ஒரு உருவமாகத் தோன்றிய தென்பது சரித்திர பூர்வமான விஷயமே. தேவை ஏற்பட்ட போது பத்திரிகை தோன்றியது. தேவை அதிகரித்த இடங்களில் அது வளர்ச்சி பெற்றது. அரசியல் அதிகாரம் ஒரு சிலரிட மிருந்து பலருடைய கைக்கு மாறியபோது பத்திரிகைக்கு அவசிய மேற்பட்டது. பத்திரிகை வளர்ச்சி ஜனநாயக வளர்ச்சியை அநுசரித்ததாக இருந்திருக்கிறது. உண்மையில் ஒரு தேசத்தில் ஜனநாயகம் எவ்வளவு தூரம் பரவியிருக்கிற தென்பதை அங்கு பத்திரிகைகளின் செல்வாக்கைக் கொண்டு அளவிட முடியும். ஜனநாயக மென்பது ஜனங்களுடைய நன்மைக்காக அவர்களே அதிகாரத்தைச் செலுத்துவது. பிரதிநிதி ஸ்தாபனங்களின் மூலமும் பொறுப்பாட்சி மூலமும் இது சாத்தியமாகிறது. ஓட்டர்கள் விஷயங்களை யறிந்து ஜாக்கிரதையா யிருப்பது இம் முறைக்கு அஸ்திவாரமாகும். அவ் வழியில் தான் பத்திரிகை உபயோகப் படுகிறது. வயது வந்தவர்களுக்குக் கல்வி போதிக்கும் வழியில் அதன் உபயோகம் மிகவும் மதிக்கப்படுகிறது. இதனால்தான் பத்திரிகைகள் உலகத்தில் நான்காவது சக்தியாகக் கருதப்படுகிறது."

என்று "சுதேசமித்திரன்" ஆசிரியர் திரு. ஸி. ஆர். ஸ்ரீநிவாசன்

சென்னை ப்ரீமேஸன் மண்டபத்தில் சென்னை ரோட்டரி கிளப் பின் சார்பாக நடைபெற்ற கூட்டத்தில், "பத்திரிகைகளுக்கும் பொது மக்களுக்கும் உள்ள சம்பந்தம்" என்பது பற்றிப் பிரசங்கஞ் செய்கையில் மேற்கண்டவாறு குறிப்பிட்டுப் பேசினர். இது மிக வும் உண்மையான விஷயமென்பதை வாசகர்களுக்கு எடுத்துக் கூற வேண்டியதில்லை. திரு. ஸ்ரீநிவாசன் கூறியிருப்பது போல், பத்திரி கைகளுக்கும் பொது மக்களுக்கும் மிகவும் நெருங்கிய தொடர்பு எப் போதும் இருந்து வந்திருக்கிறது. தற்போதுள்ள உருவத்தில் பத் திரிகைகள் முற்காலத்தில் இல்லா திருப்பினும், இன்றைய பத்திரி கைத் தொழிலின் நோக்கம் அச் சமயத்தில் இருந்திருக்க வேண்டும். ீப் பத்திரிகைகள் கால தேச வர்த்தமானத்துக்கு ஏற்றவாறு மாறு லும், அபிவிருத்தியும் அடைந்து வந்திருக்கின்றன.

ஆதிகாலத்தில் பத்திரிகை எந்த உயர்ந்த நோக்கத்தோடு—லட்சி யத்தோடு ஆரம்பிக்கப் பட்டதென்பது நமக்குத் திட்டமாகத் தெரி யாது. இவ்விஷயத்தில் பலவிதமான அபிப்பிராய பேதங்கள் இருக் கின்றன. ஆயினும், இப்போது பத்திரிகை என்பது பலவிதத்திலும் அபிவிருத்தியடைந்து ஒரு நல்ல உருவைப் பெற்று விட்டது என்று துணிந்து கூறலாம்.

பொதுவாக, பத்திரிகை என்றால் என்ன? கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு ஆகிய நாற்றிசையிலும் நடக்கும் சம்பவங்களை— செய்திகளை—த் தாங்கி வெளி வருவதே தினசரி பத்திரிகையின் இலட்சணமாகும். உலகின் பல பாகங்களிலும் நடைபெறும் அன் றன்றைய செய்திகள் பத்திரிகைகளில் வெளி வருகின்றன. பெரும் பாலும் செய்திகள் எல்லாம் உண்மையாக நடக்கும் சம்பவங்களை ஆதாரமாகக் கொண்டே நிஷ்பட்சபாதமின்றித் தரப்படுவதால் பத் திரிகையை ஒரு தஸ்தாவேஜியாகக் கொள்ளலாம். இவ்வாறு கருது வதால் தவறொன்றுமில்லை. பத்திரிகையின் முக்கியமான வேலையே செய்தியை ஜனங்க ளிடையே பரப்புவதாகையால், புதிதாக உள்ள தெல்லாம் அதற்குச் செய்தியென்று பெயர் கொடுத்து அழைக் கலாம். ஆனால் புதிதாக உள்ளதெல்லாம் படிப்பதற்கு ஸ்வாரஸ்ய முடையதாகவோ, உணர்ச்சி யுண்டுபண்ணக் கூடியதாகவோ இருப்ப தில்லை. மனிதர், காலம், இடம், சந்தர்ப்பம் முதலியவற்றை யனு சரித்தே செய்திக்கு மதிப்புண்டாகிறது.

பத்திரிகை வெளியிடுவது செய்திகள் மட்டுமல்ல. அதற்கு வேறு பொறுப்புகளு மிருக்கின்றன. செய்திகளை வெளியிடுவதோடு, பொதுஜன அபிப்பிராயத்தையும் பத்திரிகை திரட்டித் தரவேண்டியது அவசியமாகும். செய்திகளை வெளியிடுவதிலிருந்தே இவ்வித பொறுப் புகளும் ஏற்படுகின்றன. ஒரு செய்தி முக்கியமானதா யிருந்தால், அதைப் பற்றிய முழு விவரத்தையும் பொது மக்கள் தெரிந்து கொள்

ளுமாறு விவரமாக எழுத வேண்டியது பத்திரிகையின் இன்றியமை யாக் கடமையாகிறது. இவ்விதம் ஒரு முக்கிய செய்தியை வியாக்கி யானப் படுத்தி யெழுதப் படும் கட்டுரையே பத்திரிகையின் தலையங் கம் என்று வழங்கப்பட்டு வருகிறது. இது பெரும் பாலும் பத்திரி காசிரியரின் அதாவது பத்திரிகையை நடத்துபவரின் அபிப்பிராய மாகும். இத்துடன், பத்திரிகை படிக்கும் மக்களும் தங்களுக்கு முக் கிய மெனத் தோன்றிய செய்திகளைப் பற்றித் தங்கள் அபிப்பிராயங்க ளைத் தெரிவிக்கலாம். அவ்விதம் பத்திரிகை படிக்கும் மக்கள் அதா வது வாசகர்களால் எழுதி யனுப்பப் படும் அபிப்பிராயங்கள் பத்தி ராசிரியரால் மேற் பார்வை யிடப்பட்டு, "கடிதங்கள்" என்னுந் தலைப் பின் கீழ் வெளிவரும். இதுவே யன்றி, சிறந்த அறிஞர்களைக் கொண்டு அன்று வெளியான செய்தியின் முக்கிய நிகழ்ச்சி, உலக நிலைமை, அரசியல் நிலைமை, சமூக நிலைமை முதலியவைகளில் ஏதாயி னும் ஒன்றைப் பற்றித் தனிக் கட்டுரை எழுதுமாறு செய்து வெளி யிடுவது மற்றொரு முறையாகும். இவற்றை யெல்லாம் கொண்டு பார்த்தால், பத்திரிகை என்பது உலகச் செய்திகளும், பொதுஜன அபிப்பிராயங்களுந் தாங்கி வெளிவரும் புதினத் தாளாகும் என்று நாம் முடிவுகட்டி விடலாம்.

ஆரம்ப கால பத்திரிகையின் நோக்கம் எவ்விதம் இருப்பினும், நாளடைவில் பத்திரிகைகள் உலகச் செய்திகளோடு பொதுஜன அபிப் பிராயம், பேரறிஞர் கருத்து முதலியவைகளுக்கும் பிரதம ஸ்தானம் அளித்து வரலாயின. ஆகவே, காலப் போக்கில், பத்திரிகைகள் இரு பிரிவாகப் பிரிந்தன. ஒரு சில பத்திரிகைகள் செய்திகளுக்கு முக்கியத்துவங் கொடுத்தும், வேறு சில பத்திரிகைகள் பொதுஜன அபிப்பிராயத்துக்கு அதிக இடங் கொடுத்தும் வெளிவரலாயின. இப்போது வழங்கும் முறையில் பார்த்தால் முதற் பிரிவு பத்திரிகை களை, 'தினசரிப் பத்திரிகை'க ளென்றும், இரண்டாவது பிரிவைச் சேர்ந்த பத்திரிகைகளை 'ஸஞ்சிகைகள்' என்றும் நாம் அழைக்கலாம். ஆரம்பத்தில் ஒருவர் கருத்தை மற்றொருவர் தெரிந்து கொள்ளுவதற்கு ஏற்றதாக அதாவது அபிப்பிராயம் தெரிவிப்பவைகளாக ஏற்பட்ட பத்திரிகை, காலச் சக்கரத்தின் வேகத்தால் செய்திகளை வெளியிடு வது முதலிய பலவித மாறுதலை யடைந்து, பலவகைகளிலும் பொது ஜன செல்வாக்கைப் பெற்று விட்டது. "நவீன வாழ்க்கையில் பத் திரிகை மக்களின் தினசரி தேவைகளில் ஒன்றாகி விட்டது" என்று திரு. ஸ்ரீநிவாஸன் கூறியிருப்பது முற்றிலும் பொருத்தமாகும். மக்களிடையே ஒரு பத்திரிகை பெறும் செல்வாக்கு அதன் ஆசிரியர் தன் கடமைகளையும், பொறுப்புகளையும் உணர்ந்து நடத்தும் விதத்தைப் பொறுத்ததாகும். பத்திரிகாசிரியர் பதவியை வகிப்பவர் களுக்குத் தெளிந்த அறிவும், ஆழ்ந்த உலகானுபவமும், நேர்மையும், நடுவு நிலைமையும், தீர்க்க தரிசனமும் முக்கியமாக இருக்கவேண்டும்.

இவ்விதப் பண்புகள் ஒரு சிறிது மில்லாதவர்கள் பத்திரிகாசிரியர்களாவதற்குத் தகுதியற்றவர்க ளாவர். அத்தகையோர் பத்திரிகாசிரியர்களாக வருவது ஜனசமூகத்துக்கே மிகவும் அபாயகாமானதாகும்.

நம் தமிழ்நாட்டில் சுமார் பத்து இருபது வருடங்களுக்கு முன் இருந்ததை விட பத்திரிகைகளுக்கு இப்போது பொது மக்களிடையே சிறிது செல்வாக்கு ஏற்பட்டிருக்கிறது. இது அமையாது. இன்னும் போாதரவு கிடைக்க வேண்டும். தமிழ் நாட்டில் பத்திரிகையின் ஆரம்பகாலம் அதன் உற்பத்தியாளர்களுக்கு மிகவும் சிரமமாகவே இருந்தது. காலஞ் சென்ற ஸ்ரீமான்கள் ஜி. சுப்பிரமணிய ஐயர், எம். வீரராகவாச்சாரியார், ஸி. கருணாகா மேனன், எஸ். கஸ்தூரி ரங்க ஐயங்கார், ஏ. ரங்கஸ்வாமி ஐயங்கார் முதலியவர்கள் ஜன சமூகத்திற்குச் சேவை செய்ய வேண்டு மென்ற ஒரு பெரு நோக்கோடேயே "இந்து" "சுதேசமித்திரன்" முதலிய பத்திரிகைகளை ஆரம்பித்து நடத்தினர்கள். அவர்கள் விதைத்த விதைதான் இன்று தமிழ் நாட்டில் பத்திரிகைகள் செல்வாக்கு பெறுவதற்கு நிலைக்களனு யிருக்கிறது.

இவ்வகையில் நாமும் சென்ற இருபத்திரண்டு வருடங்களாக நமது "ஆனந்தன்" வாயிலாகப் பொது மக்களுக்குச் சேவை செய்து வந்திருக்கிறோம் என்று கூறின் தற்புகழ்ச்சி யாகாது. தமிழ் மக்கள் நமது "ஆனந்தனி"ன் சேவையை நன்கு அறிவார்கள். பத்திரிகைகள் இரண்டொன்றே நிலவி வந்த காலத்தில்—அதிகச் செலவில் பத்திரிகைகள் நடத்தப்படவேண்டி யிருந்ததால், பத்திரிகையின் விலை அதிகமாக வைத்து விற்பனை செய்யப்பட்டு வந்த காலத்தில்—சாதாரண ஏழை மகனும் வாங்கிப் படிக்கக்கூடியவாறு மிகக் குறைந்த சந்தாவாகிய ஒரு ரூபாயில் "ஆனந்த"னை ஆரம்பித்து கால தேச வர்த்தமானத்திற் கேற்ப சகல விஷயங்களையுந் தாங்கி மாதந்தோறும் ஒழுங்காக வெளியிட்டு வந்திருக்கிறோம். ஒரு தமிழ் மாதப் பத்திரிகை முதன் முதலாகப் பல்லாயிரக் கணக்கான சந்தாதாரர்களைப் பெற்று நடந்து வந்ததென்றால், அது நமது "ஆனந்த போதினி"யே யாகும். இன்று தமிழ்நாட்டில் சிறந்த எழுத்தாளர்களாக விளங்கி வருபவர்களில் பலர் நம் "ஆனந்தன்" வாசகர்களே யாவர். இங்ஙனம் பல வகையிலும் சீரிய முறையில் நடந்து இருபத்திரண்டாவது பூர்த்தியடைந்த நமது 'ஆனந்தனு'க்கு வருகிற ஆடிமாத முதலில் இருபத்து மூன்றாவது வயது பிறக்கிறது. ஆகவே, 'ஆனந்தனை' நல்வரவேற்கு முறையில் தமிழ்நாட்டு மக்கள் இத்தனை வருடங்களாகப் பேரன்பு கொண்டு ஆதரித்து வந்தது போல், இனியும் ஆதரித்து வருவார்கள் என்று நம்புகிறோம். சமயம், சாஸ்திரம், சமூகம், பொருளாதாரம், அரசியல், விஞ்ஞானம், ஹாஸ்யம், சிறு கதை முதலிய பல அணிகளைப் பூண்டு இதுவரையில்லாப் புத்தழகோடு "ஆனந்தன்" இனி வந்து கொண்டிருப்பான் என்று உறுதி கூறுகிறோம்.

# நேயர்கட்கு ஒரு வேண்டுகோள்.

## 23-வது ஆண்டின் முன்னறிக்கை.

நிகழும் ஈஸ்வர வருஷம் ஆடித் திங்கள் 1-ம் தேதி (16-7-37) நமது 'ஆனந்தபோதினி' மாத சஞ்சிகைக்கு 23-வது ஆண்டு பிறக்கப் போகிறது. தமிழ் மக்களின் அன்பும் ஆதரவும் பெற்று நீண்ட நாட்களாக நின்று நிலவும் மாத சஞ்சிகைகளில் இது முதன்மை வாய்ந்ததாகும். மக்கள் வாழ்க்கை எல்லாத் துறையிலும் செழித்தோங்குமாறு செய்வதே "ஆனந்தபோதினி"யின் தனிப்பெரும் நோக்கம். வரப் போகும் 23-வது ஆண்டு முதல் வழக்கப்படி தமிழ் நாட்டில் பேரும் புகழும் பெற்று விளங்கும் தமிழ்ப்பேரறிஞர்; சமயப் பேரறிஞர் கட்டுரைகளும், புத்தம் புதிய அறிவூட்டும் இனிய கட்டுரைகளும் "போதினி"யை அலங்கரித்து எல்லாருக்கும் மகிழ்வூட்டும் என்று தெரிவித்துக் கொள்ளுகின்றோம். ஆதலால் "ஆனந்த போதினி"யின் பால் அன்பு பூண்டு ஆதரித்து வரும் சகோதர சகோதரிகள் எல்லாரும் 23-வது ஆண்டின் சந்தாத் தொகையை நாளது ஈஸ்வர வருடம் ஆனித் திங்கள் 31-ம் தேதி 14—7—37க்குள் மணியார்டர் மூலமாகவோ நேரிலோ எங்கட்குக் கிடைக்குமாறு செய்ய வேண்டுகின்றோம். சந்தாத் தொகையின் பொருட்டு வி. பி. பி. அனுப்புவதால் தபாற் செலவு 4 அணா மணியார்டர் கமிஷன் 2-அணா ஆக 6-அணா அதிகச் செலவும் சஞ்சிகை வந்து சேர வீண் காலதாமதமும் ஏற்படும். ஆகையால் எல்லாரும் மேற்குறிப்பிட்ட தேதிக்குள் மணியார்டர் செய்து விடுவதுதான் உங்கட்கும் எங்கட்கும் இலாபமும் சௌகரியமும் ஆகும். வி. பி. அனுப்புவதால் இன்னொரு சங்கடமும் உண்டு. அதாவது வி. பி. வந்தால் ஏழு நாளைக்கு மேல் தபாலாபீஸில் வைத்திருக்க மாட்டார்கள். அதற்கு மேல் வி. பி.யை நிறுத்தி வைக்கவேண்டும் என்று விரும்புகின்றவர்கள் நாள் 1-க்கு 2 அணா வீதம் தபால் தலை வாங்கி ஒட்டி விண்ணப்பித்துக் கொள்ளவேண்டும். அதுவும் பத்து நாளைக்கு மேல் தபாலாபீஸில் வைத்திருக்க மாட்டார்கள். இந்தச் சங்கடங்களை யெல்லாம் உத்தேசிக்கும் போது எல்லாரும் சந்தாத் தொகையை முன் பணமாக அனுப்பி ஆதரிப்பதே நன்மை என்று தோன்றும். சிங்கப்பூர், பினாங்கு, பர்மா போன்ற வெளி நாடுகளுக்கு வி. பி. யே கிடையாது.

குறிப்பு:-முன்பணம் அனுப்புவோர் பழைய சந்தாதார்களாயிருந்தால் மணியார்டர் கூபனில் தங்களுடைய சந்தா எண்ணைக் குறிப்பிட்டு "23-வது ஆண்டுக்கு" என விவரம் எழுதவேண்டும். புதிய சந்தாதார்கள் "புதிய ஆண்டுக்கு" என்று விவரம் எழுதவேண்டும்.

இனாம் ! இனாம் !! இனாம் !!!

சந்தாத் தொகையை மேற் குறிப்பிட்ட தேதிக்குள் அனுப்புகிறவர்களுக்கு எங்களது அடுத்த வெகுதானி வருஷ "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம் ஒன்று இனாமாக அனுப்பப்படும். மானேஜர்.




# ஔவையார்



(ஸ்ரீமதி. பண்டிதை-அசலாம்பிகை அம்மையார்.)

வல்லமை பேசேல் என்பது அடுத்த நீதி. இதற்கு உன்னுடைய சாமர்த்தியத்தை நீயே புகழ்ந்து பேசாதே என்பது பொருள். தன் திறமையை எண்ண முற்படுங்கால் தன்னை யறியாமலே செருக்கு கால் கொள்ளும். இது சாதாரண இயற்கை. நான் என்பது எனதென்பது ஆகிய இரண்டுமே அறிவுடைய மனிதனையும் முன்னேற வொட்டாமல் தடுப்பவைகள். இதனை வடமொழி யறிஞர் அகங்கார, மமகாரங்களென்று கூறுவார். சாதாரண வழக்கில் அகங்கார முடையவனென்று கூறுவது எவரும் அறிந்ததே. தமிழ் நாட்டில் முன்னும் பின்னும் செத்திருந்தால் சுடுகாடு தெரியும் என ஒரு பழமொழி வழங்குகிறது. இதில் விசேஷ பொருளமைதியுளது. இதை உபயோகிக்கும் பலர் இதன் உள்ளுறையை ஊன்றி நோக்காம லிருக்கலாம். நோக்கினால் ஞானத்திறவு மறைமுகமாய் அதனுள் அமைந்து கிடப்பது புலனாகும்.

"முன் என்பதுதான் நான் வல்லவன் என்றெழு முனைப்பு"

"பின் என்பது என்னுடையது என்னும் தடிப்பு" ஆகிய இவ்விரு வகை யுணர்ச்சிகளும் செத்திருந்தால் மோகத்தைச் சுட்ட ஞானமாகிய ஒளி உதயமாகும் என்பது அப் பழமொழியின் கருத்து. முன் தோன்றுவதாகிய செருக்கு வீழ்ச்சியுற்றால் பின் தோன்றுவதற்கு இடமேயிராது. ஆதலினால் அன்னையார் வல்லமை பேசேல் என்ற ஒரே விஷயத்தை வற்புறுத்தியருளினர் போலும். இனி தன் வல்லமையை எடுத்துக் கூறவேண்டிய சந்தர்ப்பங்கள் சிலவற்றையும் நன்னூலாசிரியர்,

"மன்னுடை மன்றத் தோலைத் தூக்கினும்
தன்னுடை யாற்றல் உணரா ரிடையினும்
மன்னிய அவையிடை வெல்லுறு பொழுதினும்
தன்னை மறுதலை பழித்த காலையும்
தன்னைப் புகழ்தலும் தரும் புலவோர்க்கே"

என்ற சூத்திரத்தினால் உணர்த்துகிறார். இதன் பொருள், அரசனது சபைக்கெழுதும் சீட்டுக் கவியிலும், தனது கல்வி வலிமையை அறியாதார்க

விடத்திலும், பெரிய சபையில் வாதஞ்செய்து வெல்லும் பொழுதும், தன்னை எதிரி பழித்த காலத்திலும் தன்னைத் தான் புகழ்ந்து பேசுதல் புலவனுக்குத் தகும் என்பது. இந்த உரிமையும் புலமை மிக்குடையவர்களுக்கே உண்டென்பதை நினைவில் வைக்கவேண்டும்.

வரகவிகளானோர் அரசனது அவைக்கெழுதும் சீட்டுக் கவிகளில் தமது பெருமையைக் கூறுவதுபோலக் கடவுளர் முகத்தும் கூறுவர். துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் வெங்கை நகர்ப் பிடாரிக் கெழுதிய

"திருந்து தமிழிலக்கண வைந்திணைக் கோவை
விருத்த கிரிச் செல்வர்க் கோதும்
பெருந்தகைமை யுடையம் யாம் விடுமோலை
வெங்கை நகர்ப் பிடாரி காண்க!
இரும்புவியில் ஒரு முருங்கைக் கொம்
பொடியாமற் காத்திருக்கும் நீ நம்
முருங்கைதனை வேரோடும் களைந்தனை
யென்று னுனக்கு முறையோ சொல்லாய்"

என்ற சீட்டுக் கவியில் "பெருந்தகைமை யுடையம் யாம் விடுமோலை" என்று தனது மதிப்பை ஏற்றியும், வெங்கை நகர்ப்பிடாரி என்று பிடாரியின் மதிப்பை இறக்கியும் எழுதியிருப்பது காண்க. தன்னை அருச்சிக்கும் அன்பனும் ஏழையுமான தருமி என்னும் அந்தணச் சிறுவன் பொருட்டுப் புலவர் வேடம் தரித்த கூடல் நாயகனான சோமசுந்தரக் கடவுளும், பொற்கிழி கட்டிய பாண்டியனுக் கெழுதிய சீட்டுக்கவியில்,

"மதிமலி புரிசை மாடக் கோயில்
பதியிசை நிலவிய பால்நிற வரிச்சிறை
அன்னம் பயில்பொழில் ஆலவாயில்
மன்னிய சிவன் யாம்"

என்று தன்னைச் சிறப்பித்திருப்பதும் கவனிக்கத் தக்கது.

இரண்டாவது தன்னுடைய வல்லமையை உணராதவர்களிடம் தன் பெருமையை எடுத்துக் காட்டுவது எதிரிக்கு விளக்கத்தை யுண்டுபண்ணு மாகலின் அதுவும் குற்றமாகாது. அவ்வாறு கூறுவதன் பயனாக விபரீத விளைவு மறைந்து நன்மையும் உண்டாகலாம். இம்முறை போர்முனையில் பெரிதும் கையாளப்படுவது இயல்பு. இத்தகைய தற்புகழ்ச்சி வீரவாத மென்று கூறப்படும்.

மூன்றாவது தன்னை மறுதலை பழித்த காலையும் புலவர்களுக்கு இந்த உரிமையுண்டு. பாண்டிய மன்னனுடைய சமஸ்தான வித்துவான் புகழேந்திப் புலவர் குலோத்துங்கச் சோழனுடைய அவையில் சோழனைச் சிறப்பித்து அவனது சமஸ்தான வித்துவானாகிய ஒட்டக்கூத்தர் கூறிய

"வென்றி வளவன் விறல்வேந்தர் தம்பிரான்
என்று முதுகுக் கிடான்கவசம்—துன்றும்"

என்று முன் இரண்டடி கூறியதைக் கேட்டதும் தனது அரசனாகிய பாண்டியனுக்கு வரக்கூடிய இழிவைப் பொறாமல்,

"வெறியார் தொடைகமழு மீனவர்கோன் கைவேல்
எறியான் புறங்கொடுக்கி னென்று"

என்ற பின்னிரண்டடிகளைக் கூறிப் பூர்த்தி செய்ததாகக் கூறப்படுகின்றது. ஒட்டக்கூத்தர் தனது சோழமன்னன் புற முதுகு காட்டி ஓடுவோம் என்னும் ஐயப்பாடில்லாத வீரனாதலினால் முதுகுக்குக் கவசம் அணியும் வழக்கம் அறியாதவன் எனச் சிறப்பித்து முன் இரண்டடி கூறினார். பாண்டியன் சார்பாகப் புகழேந்தியோ "ஆம் புறமுதுகு காட்டி அமர்க்களத்தில் அஞ்சியோடுபவர்கள் யாராயினும் அவர் தம் முதுகைப் பார்த்துத் தன் ஆண்மைக்கு இழிவென்று வேல் எறியமாட்டான் பாண்டியவேந்தன் என்னும் நம்பிக்கையைக் கொண்டு" என்று பொருள் படும்படிப் பாடி முடித்தார் என்பதே மேலே சுட்டிய வெண்பாவின் பொருள். இது எத்துணை அழகியதென்பதை நோக்குங்கால் புலமையின் பெருமைக்கு நிகர் மற்றொன்றுண்டோ ?

தன்னை மறுதலை பழித்த காலையும் தன்னைப் புகழ்தலும்தகும் என்பதற்கு உதாரணமாக ஒட்டக் கூத்தரால் சிறையிலிடப்பட்ட குயவன், அம்பட்டன், கருமான் ஆகியவர்கள் கேள்விகளுக்கு இறுத்த விடைகளான

"மோனை முத்தமிழ் மும்மதமும் பொழி
யானை முன்வந் தெதிர்த்தவ னாடா
கூனையும் குடமுந் தண்டு சட்டியும்
பானையும் பண்ணும் அங்குசப் பயல்யான்."

எனவும்,

"விண்பட்ட கொக்கு வல்லூறு கண்டென்ன விலவிலக்கப்
புண்பட்ட நெஞ்சொடு மிங்குநின்றாய் பொட்டையாய் புகல்வாய்
கண்பொட்டை யாயினு மம்பட்டன்நான் கவிவாணர் முன்னே
பண்பட்ட செந்தமிழ் நீயும் திடுக்கிடப் பாடுவனே"

எனவும்,

"செல்லன் புதல்வன் திருவேங்கடவன் செகத் குருவாம்
கொல்லன் கவியைக் குறைசொன்ன பேரைக் குறடுகொண்டு
பல்லைப் பிடுங்கிப் பருந்தாட்ட மாட்டிப் பகைவர் முன்னே
அல்லும் பகலு மடிப்பேன் கவி யிருப்பாணி கொண்டே"

எனவும் வரும் கவிகளை விடச் சான்று வேண்டியதில்லை. இத்தகைய உரிமை புலவர்களுக்கு மட்டில் இருந்ததேயன்றி ஏனையோர்களுக்கு வழங்கப்படவில்லை. புலவர்களும் மேலே குறிப்பிட்ட நான்கு சந்தர்ப்பங்களில் தான்

தற்புகழ்ச்சியைக் கையாளலாம். ஆதலால் நமது நீதிக்கிழத்தியார் வல்லமை பேசேல் என்று அறிவூட்டுகின்றார். உண்மையில் வல்லமை யுடையவர் அற்பத்தனமாக அதனை வெளியிட நாணுவர்.

கூரம்பாயினும் வீரம் பேசேல் என்ற நீதியும் இதனையே வலியுறுத்தும். நிறைகுடம் தளும்பாது, பாரம் பொறுத்த தட்டு தாழும் என நம் நாட்டில் பலப்பல பழமொழிகள் அடக்க முடைமைக்குச் சுட்டாக வழங்கி வருவதை அறிவிக்க வேண்டுவதில்லை.

அறிஞர் எப்போதும் தனது வல்லமையை அற்பர்கள்போல வெளியிட நாணுவர் என்னும் உண்மையை, இராமாயணம் திருவடிதொழுத படலம் ஒன்பதாவது செய்யுளில் மாருதி வாசகமாகக் கம்பநாடர்,

“ஆண்டகை தேவியுள்ளத் தருந்தவம் அமையச் சொல்லிப்
பூண்ட பேரடையாளங் கைக்கொண்ட தும்புகன்று போரில்
நீண்டவா ளரக்கரோடு நிகழ்ந்ததும் நெருப்புச் சிந்தி
மீண்டதும் விளம்பலாற்றான் தான்தன் வென்றியை யுரைப்ப வெள்கி.”

எனத் தெளிய வைத்தார்.

இந்திய புராதன இதிகாசங்களில் வில்வீரர்கள் எல்லோரிலும் தலைமையாக வைத்து எண்ணபபட்டவர் இராமபிரானே யாவர். ஊன்றி நோக்குங்கால் இவ்வித ஒப்பாரு மிக்காரு மில்லாத ஒருவர் பெற்ற பெரு வெற்றிக்கு உண்மைக் காரணமாக இருந்தவர் இந்த அஞ்சனை குமரன். அவரே தனது வென்றியைத் தனது நண்பர்களிடமும் வெளியிட நாணினர் என்றால் பிறர் கடமை என்ன வென்பதைப் பேசவேண்டுமோ?

இப் பெரியோன் பிராட்டியை அசோக வனத்திற் கண்டு கணையாழியளித்து அவர் சந்தேகம் தீர விசுவரூபமும் காட்டி மகிழ்வித்தபோது அன்னை புகழ்ந்து,

“இவனே யெங்கோன் துணையென்றால்
மாண்டேன் எனினும் பழுதன்றே.”

எனக் கூறுகின்றார். அதுகேட்ட அநுமான்,

“அண்ணற் பெரியோனடி வணங்கி அறியவுரைப்பா னருந்ததியே
வண்ணக்கடலி னிடைக்கிடந்த மணலிற் பலரால் வானரத்தின்
எண்ணற்கரிய படைத்தலைவர் இராமற் கடியார் யானவர்தம்
பண்ணைக் கொருவன் எனப் போந்தேன் ஏவக்கடவ பணிசெய்வேன்.”

எனத் தாழ்மையாகக் கூறினார்.

தன்னைவிட வல்லமையுடைய வானரர்கள் எண்ணற்கரியர் என்பதால் தனது அடக்க வுணர்ச்சி மிக மிக ஒளிவீசிய தொன்று. இராமசகாயர்கள் பின்னும் பற்பலர் என்பதால் பிராட்டிக்கு மகிழ்ச்சிவெள்ளம் பெருகுவதொன்று. இவ்விரு பயனும் வல்லமை பேசாத ஒரே மொழியினால் விளைந்

தவை யென்பது உன்னற்பாலது. வல்லமை யுடையாரே அதனைப் பேசுதல் தகாது; புகழன்றென்னில் வல்லமையில்லாதவர்கள் அதைப்பற்றிச் சிந்திக்க வேண்டியதேயில்லை. இது குறித்தே, "நாம் பெரியர் என்னுமதை நாடா திருக்குமவர் தாம் பெரியரென்று மறைசாற்றி யிடும்" என்ற மூதுரையும் எழுந்த தென்க.

இனி "வாது முற் கூறேல்" என்னும் நீதி. நீ வழக்குகளை முன்னதாக எடுத்துரைக்காதே என உணர்த்துவதாகும். இந்நீதி முக் காலங்கட்கும் பொருத்தமான முதுமொழி. சட்ட நிபுணர்களாகி நீதி மன்றங்களில் நியாய வாதம் புரியும் வழக்கறிஞர்கள் இன்றும் தன்பால் ஆலோசனை கேட்க வருவோர்களுக்குக் கூறும் புத்திமதி நீ வாதியாக முற்படாம லிருக்கக்கூடிய மட்டில் முயற்சி செய்க என்பதே யாகும். எதிரிமீது தான் சாட்டும் குற்றங்களை மெய்ப்பிக்க மேற்கொள்ள வேண்டிய முயற்சிகள் அநேகம். அவற்றுள் சிதைவுறாமல் நிற்பவை மிகச் சொற்பம். அரசராகிய அதிவீரராம பாண்டியரும் இதனை வலியுறுத்தவே,

"பொய்யுடை யொருவன்சொல் வன்மையினல்
மெய்போலும்மே மெய்போலும்மே."

"மெய்யுடை யொருவன் சொல்ல மாட்டாமையால்
பொய்போலும்மே பொய்போலும்மே."

என்றெடுத்துக் காட்டினர்.

இதிலுள்ள சிரமம் கருதியே,

"பொய்யிலா நிற்பி னின்றன நீதி."

என்றனர் கம்பநாடர். அவ்வாறு உண்மை புலனுவது தெய்வத்திருவருளாலன்றி வேறு சாதனங்களால் முடியாது. அவ்வித தெய்வகருணை அறத்தாற்றில் வழாத உத்தமர்கட்கே முன்னிலைப் படுவதாகும்.

இதுவுமன்றி "வாது முற் கூறேல்" என்பதற்கு வழக்குகளை நீ பெரியோர் முன்பு கூருதே என்று உரையாசிரியர் கூறியுள்ளார். அவ்வாறு கூறுவது அற்பர்களுக்கே தகும். அறிவுடைய மைந்தர்களுக்கு அடக்கமே அழகு செய்யும். பெரியோர்கள் முற்கூறியவர்களை ஒருபோதும் மதியார்கள். அறிவிற் சிறந்த பெரியோர்களின் கருணைக்குப் பாத்திரமாதலே பிறவிப்பயன் என்றுணர்ந்து அதற்கேற்ப நடத்தல் எல்லா நலமும் தரவல்லது பெரியாரால் கைவிடப்பட்டவன் கடவுளாலும் கை விடப்பட்டவனே யென்பது வெளிப்படை. இதைக் குறித்தே பெரியாரைத் துணைக்கொள் என்றருளியதும். பெரியாரைத் துணைக் கொள்ளுவதற்கு அவர் முன்புதான் மிகத் தெரிந்தவனைப் போல வழக்குரை பேசா தொழுகுவதும் ஒரு சாதனமாகும்.

இனி "வித்தை விரும்பு" என்னும் நீதி, இதற்கு நீ கல்விப்பொருளையே விரும்புவாயாக என்பது பொருள். பொதுவாக இது கல்வியாகிய செல்வத்தை விரும்பித் தேடு என்று இளைஞர்கட்குத் தோன்றுமாயினும், சிறப்பாக கல்வியினல் விளையும் மெய்யுணர்வாகிய செல்வத்தை நீ அடைய ஆசைப்படு

என்பதே கருத்து. கற்கப்படுவது கல்வி யென்பது வெளிப்படை. கல் என்னும் பண்புபற்றி கல்வி என்றெழுந்தது. நமது உள்ளத்தைத் தூர்த்து நிற்கும் அறியாமையை அகழ்ந்து அகற்றுதல் என்பதே கல்வி என்பதன் குறிப்பாகும். அவ்வாறு கல்வி அறியாமையை அகற்றினவர்கட்கே வித்தை (மோக்ஷ சாதனத்தை) விரும்புதல் எளிதாம். "அலகுசால் கற்பி னறிவுநூல் கல்லா, துலகநூ லோதுவ தெல்லாம்; கலகல, கூஉந்துணை யல்லாற் கொண்டு யடமகற்றிப் போம் துணையாமோ புகல்" என் றருளிய அறிஞர் கருத்தும் சிந்திக்கத் தக்கதாகும். இதனை வலியுறுத்தவே பொய்யாமொழிப் புலவரும்,

"கற்றதனா லாயபய னென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழா ரெனின்."

என்றருளினர். அழியாத மெய்யுணர்வை எழுப்புதற்கே கல்வி சாதனமாகும். அவ்வாறின்றி அழியும்படியான புன்மை யெண்ணங்களில் நம் மறிவைப் புகுத்தத் துணையாவது கல்வி யாகாது.

கல்வி யென்பது ஒரு வித்தே. அவ்வித்து முளைத்துத் தளிர்த்து விரியும் கவடுகளே பல திறப்பட்ட கேள்விகளாகும். சுயநலமற்ற தூய ஒழுக்கமே இக் கிளைகளில பொதுளிய இலைகளாகும். அவ் விலைகளின் முனையில் அரும்பும் அரும்புகளே எல்லா வுயிர்களிடமும் சுரக்கும் பேரன்பாகும். தருமமே அவ்வன்பாகிய அரும்பி னுடைய மலர்ச்சியாம். அப் பூவிலிருந்து உருக்கொள்ளும் கனியே அழியாப் பெரும் போகமாகும் என்றனர் கல்வியிற் பெரிய கம்பர். இதனால் வித்தை என்று ஈண்டு மூதியார் கூறியது, புன்மை யெண்ணங்களை உயிர்ப்பிக்கும் ஆபாஸமான போலி நூற்கட்டுகளைக் கற்பதென்பதை உணர்த்தவில்லை. சிறந்த புலமை பெற்றும் மதவாதத்தில் தலையிட்டும் பெரியாரை யிகழ முற்பட்டும் தமது கல்வியினா லெய்திய நுண்ணறிவைச் சிந்தி அழிந்தவர்கள் நம் நாட்டில் இருந்தனர். கேட்ட கேள்விகளுக்கு விடை யிறுக்காதவர்களை ஒருவரோ டொருவரைப் பிணித்து வெட்டினவர்களையும், காதுகளைத் தோட்டியால் அறுத்தவர்களையும் நம் தமிழ்நாடு கண்டிருந்ததாகப் பழங்கதைகள் நிலவுகின்றன. அவை எம்மட்டில் உண்மையோ அறியோம் தர்க்கத்திற்கென்றே தன்னை அர்ப்பணம் செய்துகொண்ட புலவர்களையும், பிறரை வசை கூறுவதே வாழ்வின் பயனாக எண்ணிப் பிறரை வருத்திய வீணர்களையும் நாம் அறியாமலில்லை. இக் குழுவினர்களை உட்குறிப்பாகக் கொண்டே நமது வள்ளுவனார் கல்வியினால் எய்த வேண்டிய பயன் வாலறிவன் நற்றாள் தொழுவதென்றே யென்பது தோன்றக் கூறிவைத்தார். கல்வி யென்று சொல்வது கற்கப்படும் எல்லா வகையான கலைகளுக்கும் பொதுப் பெயராகும். ஈண்டு ஞானம் என்பதை யுணர்த்தும் வித்தை என்னும் மொழியை அமைத்து அதனை நீ விரும்பென் றருளினர் பெரியார்.

அறுபத்துநான்கு கலைகளை யுணர்ந்து வாதில் வென்றாலும் அவைகளால் மனம் அமைதி பெறாது. அவ்வமைதி ஞானம் ஒன்றினாலேயே எழும்.

---

# பொருள் நூல்

ஸ்ரீகண்ட இராமன், எம். ஏ., எல். டி.,



(836-வது பக்கத் தொடர்ச்சி.)

விலைகளைப்பற்றிய கொள்கையைத் தற்காலத்துப் பொருள்நூல் பிரதானமாகக் கொண்டிருப்பதால் அதை கவனிப்போம். ஒரு மனிதன் அல்லது ஒரு "மார்கெட்" (சந்தை) அவசியமாகக் கருதிக் கேட்கும் ஒரு சரக்கைப்பற்றி விலை எனும் கொள்கை எழுகின்றது; விலையைப் பற்றி நாம் சிந்திக்க வேண்டியதாக இருக்கிறது பல சரக்குகள் தேவையாக இருக்கலாம். பல விலைகள் அவற்றை ஆதாரமாகக்கொண்டு முன்னுக்கு வரும். அப்பொழுது நெகிழ்ந் துறழத்தக்க அல்லது வில்லைப்போன்ற குணமுள்ள கிராக்கி (Elasticity of Demand)யைப் பற்றி அறியவேண்டும். கிராக்கி அல்லது ஆவசியகம் சரக்கைப்பற்றி நிற்பதால் கேட்கும் விலை (Demand Price) மாறலாம்:—அல்லது மனிதனுடைய விருப்பம் சரக்குகள் நிலைமையைப் பொறுத்தும் விலைகளைப் பொறுத்தும் மேலும் கீழும் வில்லைப் போல் செல்லலாம். உதாரணமாக விலையைப் பொறுத்தும் கிராக்கியைப் பொறுத்தும் மாறுதல்கள் எற்படும். மேலும் விலைக்கொள்கையை படிக்கும் பொழுது செலவழிப்பவரின் பாக்கி (Consumer's Surplus) எனும் முக்கிய கருத்து ஒன்றுண்டு. அதையும் பின்னர் ஆராய்வோம்.

பொருள்நூலில் கேட்பது அல்லது ஆவசியகம் என்பது சாமான்களுக்கு கொடுக்கப்படும் பணத்தைக் குறிக்கும். ஒரு சரக்கைப்பற்றி எற்படும் அவசியம் என்பது ஒரு சரக்கின் பல விலைகளையும் பலதிறப்பட்ட பரிமாணத்தையும் குறிக்கும். ஒரு குறித்த சாமானுக்கு ஒருவன் கொடுக்க விரும்பும் விலையை அக் குறிப்பிட்ட சாமானுக்கு அவன் கேட்கும் விலை (Demand Price) என்று சொல்லப்படும். ஒரு சாமானின் குறிப்பிட்ட எடையை அவன் பல விலைமாறுதல்களுக்கு உட்பட்டு கேட்கும் விலை அவனது விருப்பத்தை நெகிழ்ந்துறழத் தக்கதாக இருககிறது. ஒரு ரப்பரை ஒரு குறிப்பிட்ட அளவுக்கு எப்படி வேண்டுமானாலும் இழுக்கலாம். பின்னால் அது முன்பு இருந்த நிலைக்கே போய்விடுகிறது. இதை அறிந்துகொள்ள கேட்கும் விலைகளை ஆராயவேண்டும். பின்வரும் உதாரணம் விஷயத்தை விளக்கும்.

ஒருபவுண்டு காப்பிக்கொட்டையின் விலை ஒரு ரூபாயானால் கோவிந்தன் பின்வருமாறு வாங்கலாம்:—

| வாங்கும் சரக்கு | கொடுக்கும் விலை | ஒரு பவுண்டின் விலை |
|---|---|---|
| 2. பவுண்டு காப்பிக் கொட்டை | 2 ரூபாய். | ரூபா ஒன்று. |
| 4. ,, | 3 ,, | 12 அணா. |
| 8. ,, | 4 ,, | 8 அணா. |

மேற்கூறிய அட்டவணை கோவிந்தனுடைய விருப்பத்தையும் கொடுக்கும் விலைகளையும் காண்பிக்கிறது. இதில் சரக்கு அதிகமாகும்பொழுது விலை குறைவதும் விலை அதிகமானல் சரக்கு வாங்குவது குறைவதும் ஆன உண்மை மறைந்து இருக்கிறது. தேவை அல்லது அவசியம் விலையைப் பொறுத்து நிற்கிறது சில சமயங்களில் இது இந்த உண்மைக்கு வழுவி நடக்கும் உதாரண விலை என்ன குறைந்தாலும் அக் குறைந்தவிலையைக் கொண்ட சாமானைக் கோவிந்தன் விரும்பா விட்டால் என்னுவது?

தனிப்பட்ட மனிதனுடைய ஆவசியகமான அட்டவணையைப் பற்றி யோசித்தோம். இப்பொழுது ஒரு மார்க்கெட்டின் அட்டவணை ஒன்றை ஆராய்வோம். ஒரு மார்க்கெட்டில் பலர் இருப்பார்கள். பலருடைய அவசியமான கேட்கும் விலைகள் அந்த மார்க்கெட்டின் அட்டவணையைக் கொடுக்கும் அத்தகைய மார்க்கெட்டில் வரும் மனிதர் ஒரு மன எண்ணத்தோடும் விருப்பத்தோடும் வருவதில்லை. சிலர் தனவந்தர்கள்: சிலர் ஏழை மனிதர்கள்; சிலருக்கு ஒரு குறித்த சாமான் மீது மிக்க ஆசை இருக்கும். சிலரிடம் அது குறைந்து காணப்படும். ஒரு குறித்த சாமானின் விலை குறைந்தால் அது எல்லா மனிதர்களுடைய மனத்தில் ஒரே வகையான எண்ணத்தைக் கொடுத்து, அச் சாமானை அதிகமாக வாங்குமாறு ஒன்றும் செய்யாது. அக் குறைந்த விலை ஒரு சாராருடைய தேவையை அதிகப் படுத்தி அதை அதிகமாக வாங்கச் செய்வதாக இருக்கும். சிலருக்கு விலை குறைந்து போனதால் அதிகமாக வாங்க வேண்டும் எனும் எண்ணம் எழாது. முன்பு வாங்கி வந்த அளவு மட்டும் வாங்கக் கூடும். சிலருக்கு அச் சாமான்மீது விருப்பமே இராமல் இருக்கும். அதனுல் அவர்கள் விலை குறைந்து போயிற்று என்று அதை வாங்குவார்களா? வாங்கவே மாட்டார்கள். எல்லா விஷயங்களும் சரியாக இருககுமானல் அந்த மார்க்கெட்டில் அச் சாமானுடைய குறைந்த விலை அச் சாமானுடைய மொத்தக் கேட்பை (Total Demand) அதிகப் படுத்தும். அதாவது அச் சாமான் அதிகமாக விற்கும். (Other things being equal, a fall in price, however small, will increase the total demand for the commodity in the market.) அதேமாதிரி அச் சரக்கின் விலை கொஞ்சம் அதிகமானல் அச் சரக்கின் மொத்தக் கேட்பு அந்த மார்க்கெட்டில் குறைந்து விடும். (Other things being equal, a rise in price, however small, of the commodity will diminish the total demand for the commodity in the market.)

ஒரு மார்க்கெட்டில் கேட்பு விலை அட்டவணை (The demand schedule of the market) பல கேட்கும் விலைகளைக் குறிக்கும். உதாரணமாக ஒருமார்க்கெட்டில் 100,000 பேர்கள் இருக்கின்றார்கள். அங்கு சிலர் வெகு கொழுத்த பணக்காரர்களாயும் சிலர் சாதாரண பணக்காரர்களாயும் ஒரு சாரார் மத்திய வகுப்பைச் சார்ந்தவர்களாயும் ஏனையோர் ஏழைகளாயும் இருப்

பார்கள். அவர்களுடைய விருப்பம் மாறுபட்டதாக இருக்கும். ஏகோபித்து இருக்காது. கீழே காணப்படும் (மார்க்கெட்) கேட்பு அட்டவணை தயாரிக்கப்படும்.

| வாங்கும் சரக்கு. | கொடுக்கும் விலை. | ஒரு பவுண்டின் விலை. |
|---|---|---|
| 20,000 பவுண்டுகள் | ரூ 20,000 | ரூ 1 |
| 40,000 ,, ,, | 30,000 ,, ,, | 12 அணா |
| 80,000 ,, ,, | 40,000 ,, ,, | 8 அணா |

இதே மாதிரி ஏனைய சாமான்களுக்கும் விலை குறித்தால் ஒரு மார்க்கெட்டின் கேட்பு விலை அட்டவணை ஏற்படும்.

ஒரு குறிப்பிட்ட மனிதனுடைய கேட்பு அல்லது கேட்பது அதிகமானால் அவன் அதே விலையில் (முதபு கொடுத்தது) அதிகமாக வாங்குவான் என்பதையும் விலை அதிகமானால் முதலில் வாங்கியதைப் போல் வாங்குவான் என்பதையும் குறிக்கும். அதே மாதிரிதான் ஒரு மார்க்கெட்டிலும்.

## கேட்புச் சட்டம் (The Law of Demand)

முன்பு சொன்ன விஷயங்களை ஆராய்ந்து பார்த்தால் கேட்புச் சட்டம் ஒன்றை எழுதலாம். விலை குறைந்தால குறைந்த விலையின் சாமான் அதிகமாகக் கேட்கபபடும் அல்லது வாங்கப்படும். விலை அதிகமானால் அச் சாமான் வாங்குவது குறைந்து போகும். (A fall in the price of a commodity increases the demand for it while a rise in its price diminishes the demand for it.)

கேட்புச் சட்டம் குறைபடும் உபயோகச் சட்டத்தோடு நெருங்கிய சம்பந்தங் கொண்டது. ஒரு குறித்த சரக்கு வேண்டிய அளவைக் கடந்தால் அச் சரக்கின் உபயோகம் கம்மியாகும். மேலும் விலை குறையக் குறைய அச் சாமான் வாங்குவது சிறிது வளரும். ஒரு தனிப்பட்ட நபரின் மார்க்கெட் விலை அச் சாமானின் "மார்ஜினல்" உபயோகத்தைக் காண்பிக்கும். "மார்ஜினல்" உபயோகம் ஒவ்வொருவருக்கும் மாறுபடும்.

(தொடரும்)



# அன்னையின் முறையீடு

——(0)——

(ஆரியூர்-வ. பதுமநாப பிள்ளை.)

இயற்கைத் தாய் விளைவிக்கும் இந்திர ஜாலக் காட்சிகள் பலவும் நீல வானில் தோன்றும் மாலை வேளை. மாலையில் மலர்ந்து விரிந்த மலர்களிலிருந்து பெருகும் செந்தேனருந்திச் சிந்தை மயங்கிப் பல வகைப் பண்கள் பாடியவண்ணம், பொன்னிறச் சிறகுகளை உடைய வண்டுகள் பறந்து திரிந்து கொண்டிருக்கும் பூஞ்சோலை. பலவகைப் பறவைகளும் தத்தம் கூடுகளில் தத்தம் குஞ்சுகளுடன் கொஞ்சிக் குலவிக் கொண்டிருக்கின்றன. அழகிற் சிறந்த வெள்ளிப் புள்ளிகள் கொண்ட மான் குட்டிகள், பசும் புல்லை மேய்ந்து கொண்டிருக்கும் தத்தம் தாயின் மடியில் பால் பருகிக் கொண்டு நிற்கின்றன. அச் சோலையிலுள்ள எல்லாப் பிராணிகளும் தத்தம் மக்களுடன் மட்டற்ற பெரு மகிழ்ச்சியை அனுபவித்துக்கொண் டிருக்கும் போது, சுமார் பதினெட்டு வயது மதிப்புடைய அழகிற் சிறந்த ஒரு இள மங்கை மட்டும் நீர் பெருகி வழிந்து கொண்டிருக்கும் கண்களுடன் கூடியவளாய் பளிங்குக் கல் மேடையொன்றின்மேல் அமர்ந்து கொண்டிருக்கிறாள். அவளது கருவண்டையொத்த கண்கள் இரண்டும், எதிரிலுள்ள இயற்கையின்பக் காட்சிகளுள் எதையும் நாடவில்லை. தனது காதலனாகிய கதிரவன் மேற்றிசையில் மறைவதைக் கண்டு விரித்திருந்த இதழ்களைச் சுருக்கிக் குவித்துக்கொண்டு நிற்கும் செந்தாமரை மலரைப் போல், அவ்விள மங்கையின் முகமலரும் நகையொளி இழந்து வாடி வதங்கி யிருக்கிறது. சற்று தூரத்திலே, இரு மாதர்கள் உரையாடிக் கொண்டே அவளை நோக்கி வருகின்றனர். அவ்விள மங்கை அயர்ந்திருந்த நிலையைக் கண்ட அவ்விரு மாதர்களும், பெரிதும் திகைத்து நிற்கின்றனர். அவ்விருவருள் ஒருத்தி அவ்விள மங்கையின் அன்னை; மற்றொருத்தி அவளது இன்னுயிர்த் தோழி. அவ்விள மங்கையின் கவலைக்கு உரிய காரணம் என்ன வென்று, அத் தோழி அவளது அன்னையை வினவுகிறாள். தனது மகளின் கவலைக்கு உரிய காரணங்களை அந்த தாய் அத் தோழியிடம் எவ்வாறு விரித்துரைக்கிறா ளென்பதைச் சற்று கவனிப்போம்:—

"எனது இன்னுயிர்த் தோழியே! என் செல்வ மகளுக்குப் பிடித்திருக்கும் திருவரங்கப் பெரும்பித்தை என்னென்று விரித்துரைப்பேன்? இரவிலும் பகலிலும் எந்த நேரத்திலும் அவளது நினைவெல்லாம் அணியரங்கேசர் ஒருவர் மேலேயே இருக்கிறது. நாட்டிலிருப்பினும் காட்டிலிருப்பினும் தன்னுடன் இருப்ப தொன்றையே பேரின்பப் பெருவாழ்வாகக் கருதி தன்னு

டன் கொடிய வனமடைந்த தனது இன்னுயிர்க் காதலியின் வேண்டுகோளை மறுக்க மனமின்றி, இராமபிரான் வஞ்ச மானைப் பின் தொடர்ந்து சென்று அதன் வஞ்சம் உணர்ந்த பின் அதை ஒரே கணையால் எய்து வதைத் தருளினு



ரல்லவா? ஒரு பெண்ணின் பொருட்டு அந்த வஞ்ச மானை எய்த வீர நாயக ராகிய அப் பெருமான், இப்பொழுது இரவும் பகலும் இடைவிடாது அவ ளையே நினைந்து நினைந்து நெஞ்சு கரைந்து உருகிக் கொண்டிருக்கும் எனது

செல்வ மகளாகிய மடமானை அடைந்து மகிழ்வூட்டியருள இன்னும் திருவுள்ளம் இரங்கியபா டில்லையே!

அன்று, பாரதப் பெரும் போரிலே, தனது மெய்யன்பனாகிய பார்த்தனது இன்னுயிரைக் காத்தருள வேண்டி,வெஞ்சுடர்க் கதிரோன் மேற்றிசையில் ஆழ்வதற்கு முன்னரே தனது திருக்கரத்தில் விளங்கிய செஞ்சுடராழியைச் செலுத்தி அக் கதிரவனை மறைத்து உரிய காலத்திற்கு முன்னரே மேற்றிசையைச் சிவக்கச் செய்து மாலைப் பொழுது விளைவித்தருளிய மாயப் பெருமானும் ஆயர் நாயகனுமாகிய கண்ணபிரான், இப்பொழுது திருவரங்கப் பெரு நகரிலே—இரு காவிரிகளின் இடையிலே எழுந்தருளி யிருக்கிறான். அப் பெருமானது திருத் தோள்களி லணிந்த செந்தேன் ஒழுகும் பைந் துழாய் மாலையின் மேல், எனது செல்வி அடங்காப் பெருமையல் கொண்டு விட்டாள். அப் பெருமானிடமிருந்து அவன் அணிந்தருளிய தண்டுழாய் மாலையை வாங்கிக்கொண்டு வரும்படி, அவள் அவனிடம் பற்பலரைத் தூது விட்டுப் பார்த்தாய்விட்டது. அத் திருமாலையைக் கொடுத்தனுப்ப, இன்னும் அம் மணவாளப் பெருமானின் திருவுள்ளம் இரங்கிய பாடில்லை. அவனது வீரத் திருத் தோள்களைத் தழுவும் பேறு பெற்ற தண்டுழாய் மாலையைப் பெறும் வரையில், அவளது மனமும் அமைதியடையப் போவதில்லை.

முன்னொரு கால், ஆயர்களிடம் கொண்ட சீற்றப் பெருக்கினால், தனது கட்டளைக்கு உட்பட்டு நடப்பனவாகிய மேகங்கள் ஏழையும் அழைத்து எழு நாட்களாக இடைவிடாத பெருமழை பொழியச் செய்வித்த தேவேந்திரன் தலை குனிந்து ஆணவம் ஒழிந்து மன்னிப்பு கேட்குமாறு, கோவர்த்தன மாமலையைக் குடையாகத் தூக்கிப் பிடித்து பெருமழையைத் தடுத்தருளிய பேரருளாளப் பெருமானாகிய கண்ணபிரானே, இன்று திருவரங்கப் பெருமானாக மெய் யன்பர்களுக்குக் காட்சியளித்து நிற்கிறானல்லவா? இடைவிடாமல் எழு நாட்களாகப் பொழிந்த பெருமழையைத் தடுத்தருளிய பெருவள்ளலாகிய அப் பெருமான், இப்பொழுது அப் பெருமானையே இரவும் பகலும் நினைந்து நினைந்து நெஞ்சு கரைந்து உருகிக் கொண்டிருக்கும் எனது செல்வப் புதல்வியின் கருவிழிகளி னின்றும் பெருகிக் கன்னங்களின் வழியே வழிந்து கொண்டிருக்கும் கண் மாரியை விலக்கியருளச் சிறிதளவும் திருவுள்ளம் இரங்கிய பாடில்லை. நெஞ்சினின்றும் பொங்கி யெழும் மகிழ்ச்சிப் பெருக்கினால், காலையிளங் கதிரவனைக் கண்டு மெல்லிதழ்களை விரித்து மெல்லெனச் சிரித்து நிற்கும் செந்தாமரை மலரைப் போல் இன்ப நகைப்பினால் இணையற்ற பேரழகு பெற்று மலரும் எனது செல்வியின் முக மலரின் சௌந்தர்யத்தைக் கண் குளிரக் கண்டு களிப்பதற்கின்றி, அம் முக மலரை வாடி வதங்கிக் குவிந்து நிற்கச் செய்வதனால் தென்னரங்கச் செல்வர் கண்ட பலன் என்னவோ தெரியவில்லை.

முற் காலத்திலே, அமரர்களும் அரக்கர்களும் ஒருங்கே கூடி மந்தர மலையை மத்தாகக் கொண்டு வாசுகியரவைக் கயிறாகப் பூட்டி திருப்பாற் கடலைக் கடையச் செய்வித்து அம் மலை கடலில் அமிழாவாறு கூர்மாவதாரம் கொண்டு தாங்கி அமிர்தம் எழும்படி செய்வித்தருளிய திருமால், தீய குணங்கள் மிகுந்த அசுரரை மயக்க ஜகன் மோகனவதாரம் கொண்டு, தூய குணங்கள் மிகுந்த அமரர்களுக்கே அமிர்தத்தை 'வழங்கி யருளினாரல்லவா? தமது

தனிப் பெருந்தலைவனுக தன்னொருவனையே உண்மைப் பேரன்புடன் உறுதி யாக நம்பி நின்ற அமரர்களுக்கு அமிர்தம் அளித்து வாழ்வித்தருளிய கருணை வள்ளலாகிய திருவரங்கேசர், இப்பொழுது அவர் ஒருவரையே தனது ஆருயிர்த் தலைவராக உண்மைப் பேரன்புடன் உறுதியாக நம்பி நிற்கும் எனது செல்வப் புதல்வியின் செங்கனி வாயிதழ்களிலே, தமது சோதித் திருவாய் அமிர்தத்தை அளித்தருள திருவுள்ளம் இரங்கிய பாடில்லையே! அப் பெருமான் தமது சோதி வாயமிர்தத்தை எனது செல்வப் புதல்விக்கு ஒரு முறையேனும் அளித்தருளத் திருவுள்ளம் இரங்கி யருள்வா ராயின், அத் தனிப் பெரும் பேற்றை இரவும் பகலும் இடைவிடாமல் நினைந்து நினைந்து மகிழ்ந்து அப் பெருமானது தனிப் பெருங் கருணையை வாயாரப் போற்றி மனமார வாழ்த்தி நிற்பாளன்றே! மேலும், எனது மகள் பெரிதும் விரும்பி நிற்கும் தமது சோதி வாயமிர்தத்தை எனது மகளுக்கு அளித்தருள, அவர் தம்மை எத்தகைய சிரமத்திற்கும் உட்படுத்திக் கொள்ள வேண்டிய அவசியம் சிறிது கூட இல்லையே! உண்மைக் காதலால் உள்ளம் கரைந்து உருகி நிற்கும் உத்தமக் காதலி ஒருத்தியின் அகத் துயரை அகற்றி முகமலரை மலர்த்தி முத்தமளித்தருளத் திருவுள்ள மிரங்காத காதலருக்கு, 'அழகிய மணவாளப் பெருமான்' எனும் திருநாமம் ஏன்?

அன்று, வேந்தர் பலர் நிறைந்திருந்த பெருஞ் சபையிலே, துர்த்தனுகிய துச்சாதனன் தனது துகிலுரியத் துணிந்து நின்ற வேளையிலே, தனது கண்வன்மார் ஐவராலும் கைவிடப்பட்டுக் கலங்கி நின்ற காலத்திலே,

"ஆருகி இருதடங்கண் அஞ்சன வெம் புனல் சோர—அளகம் சோர—வேருன துகில் தகைந்த கை சோர—மெய் சோர—வேறு ஓர் சொல்லும் கூருமல் 'கோவிந்தா!'—'கோவிந்தா!'—என்று அரற்றிக் குளிர்ந்து நாவில் ஊருத அமிழ்து ஊறி உடல் புளகித்து உள்ளமெலாம் உருகி"— நின்ற வேளையிலே, பாஞ்சாலியின் மனக்கோயிலில் காட்சியளித்து நின்று 'அஞ்சேல்!'—'அஞ்சேல்!'—என்று அருள் செய்து, பலவகை நிறங்களுடைய பற்பல சேலைகளை ஒன்றின் பின் ஒன்ருக அளித்தருளி அவளது மானத்தைக் காத்தருளிய கருணை வள்ளலே யல்லவா, இப்பொழுது திருவரங்கப் பெருநகரில் திருவரங்கேசராக விளங்குகிறுர்! அவ்வாறு அன்று அவளுக்கு சேலைத்தானம் செய்தருளிய செல்வப் பெருமானுகிய திருவரங்கேசர், அவரையே நினைந்து நினைந்து நெஞ்சு கரைந்து உருகிநிற்கும் நிலைமையினுல்—கனங்கமற்ற சீரிய காதலினுல்—கழன்று விழும் சேலையை, உடலோடு தழுவித் தளராதிருக்கச் செய்வித்தருளத் திருவுள்ளம் இரங்குகிறுரில்லை. ஒருத்திக்கு நூற்றுக் கணக்கான சேலைத்தானம் செய்தருளிய வள்ளற் பெருமான், மற்றொருத்தி உடுத்தியுள்ள ஒரே சேலையையும் கட்டு தளர்வித்து ஒழுங்கு குலையச் செய்து விடுவது என்ன நீதியோ தெரியவில்லை!

கயிலை மலையில் வாழும் கங்காதரராகிய சிவபெருமான் செங்கையில் ஓடு கொண்டு இரந்து திரிந்து கொண்டிருந்ததைத் தடுத்து "பிச்சாடனற்குக் கயிலாய வாழ்வருள் பேரரங்கர்"—என்று மெய்யன்பர்கள் புகழ்ந்து போற்ற நின்ற பொன்னரங்கேசர், எனது கண்மணியாகிய செல்வி கண்ணீர் சொரிந்து கலங்கி ஏங்கி நிற்கும்படி பெருந்துயரை விளைவிக்கும் இருள் மிகுந்த இராப் பொழுதை வராமலே தடுத்துவிட மனமிரங்கி யருள்வாராயின்

எவ்வளவு நன்றாயிருக்கும்! 'கார்வண்ண மேனிக் கண்ணபிரா'னாகிய தென்னரங்கத் தின்னமுதரிடம் கொண்ட காதற் பெருக்கினாலே, தனது அன்னையாகிய என்னையும் மறந்து தன்னையும் மறந்து திருவரங்கர் ஒருவரையே நினைந்து நினைந்து நெஞ்சு கரைந்து உருகிக் கொண்டிருக்கும் எனது செல்வப் புதல்வி, 'ஊரும்—நாடும்—உலகமும் துஞ்சும்' நள்ளிரவிலும் உறக்க மயக்கங் கூட சிறிதளவும் இன்றி ஏங்கிக் கலங்கிக் கிடக்கிறாள். ஒரு நாழிகைப் பொழுது, அவளுக்கு ஒரு ஊழிக் காலத்திலும் பன்மடங்கு பெரியதாகத் தோன்றுகிறது. தண்சுடர் வீசி விண்மிசை உலவும் வெண் மதியங் கூட, அவளுக்கு கொடியதொரு செந்தீப் பந்தைப்போல் காட்சியளிக்கிறது. அந்த வெண் மதியின் பால்வண்ணக் கிரணங்கள், அவளது மேனியில் அக்கினிக் கதிர்களைப்போல் பாய்ந்து அவளது உடல் முழுதையும் பெரிதும் எரிக்கிறது. அத் திங்கள் மறைந்து வெங்கதிரோன் கீழ்த்திசையில் எப்பொழுது தோன்றுவானோ என்று எதிர்பார்த்து எதிர்பார்த்து அவள் நெஞ்சு துடிக்கும் துடிப்பை—அது பதைக்கும் பதைப்பை-உள்ளது உள்ளபடி உணர்த்தக் கூடிய சக்தி, கேவலம் வார்த்தைகளுக்கு இல்லை. ஓரிரவு கழிவது, ஒரு பெரும் யுகம் கழிவது போலத் தோன்றுகிறது அவளுக்கு! தலைவனைப் பிரிந்து தனித்திருக்கும் எனது மகளின் மனத்துயரைப் பன்மடங்கு பெருக்கிவிடும் அருளற்ற இருள் மிகுந்த இரவை வாராமலே தடுத்துவிட, திருவரங்கேசர் இனியேனும் திருவுள்ளம் இரங்குவாராயின் எவ்வளவு நன்றாயிருக்கும்!

முன்னொரு நாளிலே, முதலை வாயிற் சிக்கி செய்வகை யறியாமல் திகைத்து—

> "நீரார் மலர்க் கமலம் கொண்(டு) ஓர் நெடுகையால்
> நாராயணா! ஓ! மணிவண்ணா! நாகணையாய்!
> வாராய், என் ஆர் இடரை நீக்காய்!"

என்று பெருங் குரலிட்டுக் கதறி யழைத்த யானைக்கு அருள் செய்வதற்காக, தம்மைச் சூழ்ந்து மகிழ்வூட்டிக் கொண்டிருந்த பிராட்டிமாரையும் பொருட்படுத்தாமல், கருடன் முதுகில் ஏறி திசைகளெல்லாம் நடு நடுங்கும்படி பயங்கரமான வேகத்துடன் மடுவை அடுத்து யானைக்குக் காட்சி கொடுத்து இடர் துடைத்தருளிய அருட்பெரு வள்ளலாகிய அணியரங்கேசர், அந்த யானையின் மத்தகத்தைப் போன்ற கொங்கைகளை உடைய எனது செல்வ மங்கையின் முன்பு அன்புடன் வந்து நின்று காட்சி தந்தருள இன்னும் மன மிரங்காதிருக்கிறாரே! இனி, அப் பெருமான் இவளிடம் திருவுள்ளம் இரங்கியருளும் நாள் எந்த நாள் என்ப தொன்றையே சிந்தித்து சிந்தித்து எனது நெஞ்சு அனலில் இட்ட மெழுகைப்போல் உருகிக் கொண்டிருக்கிறது.

திருவரங்கப் பெருநகரில் எழுந்தருளி யிருக்கும் அழகிய மணவாளப் பெருமாள், 'பொங்கோதம் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும் அங்காதும் சோராமே ஆள்கின்ற'—'செங்கோலுடைய திருவரங்கச் செல்வனார்' ஆதலினால்,—இந்நிலவுலகிலும் மற்ற உலகங்கள் எல்லாவற்றிலு முள்ள எல்லா வேந்தர்களுக்கும் தனிப் பெருந் தலைமை பூண்ட 'மன்னர் குலத் தனிப் பெருந் தெய்வம்' ஆதலினால்—மற்றெல்லோருக்கும் குற்றமற்ற நீதி முறை எத்தகைய

தென்பதை உணர்த்தி யருளக் கடமைப்பட்டவ ரல்லவா? அவரது திருவடிக ளிலே உண்மைக் காதல் கொண்டு நிற்கும் மெய்யன்பர்கள் எல்லோரிடமும் ஒரே மாதிரியான அன்பு காட்டவேண்டுவது, அவரது கடமையல்லவா?

இட்சுவாகு முதல் இராமபிரான் வரையில் சிறந்து விளங்கிய எண்ணிறந்த மன்னர்களால் பூசிக்கப் பட்டவரும் 'மன்னர் குலத் தனிப் பெருந் தெய்வ'முமாகிய திருவரங்கேசர், தமது செங்கோலாட்சியிலே பார பட்சமாக நடந்து கொள்வது முறையாகுமா? 'ஸத்ய காமன்' என்றும் 'ஸத்ய ஸங்கல்பன்' என்றும் வேதங்களால் பெரிதும் போற்றிப் புகழப்படும் ராஜராஜராகிய ஸ்ரீரங்கராஜர் நடத்தியருளும்நீதி, இப்படியும் இருக்கலாமா? இதுஎன்ன நீதி? 'வேலியே பயிரை மேய்ந்தால், வேளாளன் வேறு எவரிடம் சென்று முறையிட்டுக் கொள்வது?' எனது செல்வப் புதல்வி, தென்னரங்கத் தின்ன முதர் ஒருவரையே தனது ஆருயிர்க்கு அரசராகவும் தனிப் பெருந் தலைவராகவும் இன்னுயிர்க்கினிய துணைவராகவும் புகலிடமாகிய தெய்வமாகவும் உறுதியாக நம்பியிருக்கிறாள். இனிமேல், அவளைக் குறித்து நான் வருந்தி ஆவதென்ன? அப் பெருமான், இனி இவளிடம் திருவுள்ளம் இரங்கியருளும் நாள் எந்நாளோ அறியேன்."

இக் கட்டுரைக்கு ஆதாரமாக இலங்கும் திருவரங்கக் கலம்பகக் கவி விளைவிக்கும் இணையற்ற இன்பத்தை அன்பர்கள் அனைவரும் அனுபவிக்குமாறு, அதையும் இங்கு வெளியிட்டு விடுகிறேன்.

"மானை எய்தவர்—இன்னம் என் மட மானை எய்திலர்; நேமியால்
மாலை தந்தவர்—பைந்துழாய் மது மாலை தந்திலர்; இந்திரன்
சோனை மாரி விலக்கிவிட்டவர்—சோரி கண் மாரி விலக்கிலார்;
சுரர்களுக்(கு) அமுதம் கொடுத்தவர்—சோதி வாய் அமுதம் கொடார்;
தானை ஐவர் கொடிக்(கு) அளித்தவர்—தானை கொண்ட(து)
[அளிக்கிலார்;
சங்கரற்(கு) இரவைத் தடுத்தவர்—தையலுக்கு இரவைத் தடார்:
ஆனை முன் வரும் அன்புளார் மூலை ஆனை முன்வரும் அன்பிலார்;
அணி அரங்கர் நடத்தும் நீதி, அநீதியாக இருந்ததே!"



# காதற் கோலம் அல்லது அம்பிகாபதி

(பி. கே. ராகவன்.)

எக் காலமும் நீர் வளமும் நில வளமும் கொண்டது சோழ நாடே. அது பூதேவிக்கு முகம் போன்றது. புலவர் பலராலும் புகழப் பட்டதும் அந்நாடே. சோழ ராஜனது சபையில் புலவர்களுக்குத் தலைமை பெற்றிருந்தவர் கவிச் சக்கரவர்த்தி கம்பர். அவரது புதல்வன் அம்பிகாபதி. அவன் கல்விபயிலும் சமயம் சோழராஜனின் அருமைப் புதல்வியும் அவனுடன் கல்விபயின்று வந்தனள். அரசன் புதல்விக்குத் தெரியாத விஷயங்கள் யாவையும் அம்பிகாபதி அவளுக்கு அன்புடன் எடுத்துரைத்து விளக்குவான். இது முதல் கவியரசன் புதல்வனும் புவியரசன் புதல்வியும் மிகுந்த நேசங் கொண்டு விளையாடி வந்தனர்.

இவ்வாறு பன்னெடு நாட்கள் சென்றன. அம்பிகாபதி தக்க பருவமடைந்ததும் "மகனறிவு தந்தையறிவு" என்றபடி கல்வியில் மிகவும் தேர்ச்சி பெற்றுத் தந்தையைப்போல் கவி பாடும் வன்மை பெற்றான். இது கண்ட சோழன் தனது சபையில் அம்பிகாபதியை ஆஸ்தான வித்வானாக்கி அவனுக்கு பல சன்மானங்களும் வழங்கிவந்தான். சோழனது புதல்வியும் தக்க பருவமடைந்து உருவிலும், திருவிலும், அறிவிலும், அடக்கம் முதலிய நற்குணங்களிலும் வளர்ந்து தேயாமதிபோல் சிறந்து அந்தப்புரத்தே வசித்து வந்தனள்.

அம்பிகாபதியின் புகழ் நாடெங்கும் பரவிற்று. சோழனது புத்திரியும், அம்பிகாபதியின் புகழைக் கேட்டுத் தன் இளமைப் பருவத்தில் அம்பிகாபதியுடன் கூடி அழகிய பூஞ்சோலைகளில் விளையாடின நாட்களை நினைத்தனள். அவன் மீது காதல் கொண்டனள். அவனை மறுபடியும் சந்திக்க வேண்டுமென்ற எண்ணங் கொண்டனள். சின்னாட் சென்ற பிறகு ஒரு நாள் தன்னைத் தனிமையாக ஓர் பூங்காவனத்தில் சந்திக்குமாறு ஒரு கடிதம் எழுதி அதைத் தன் அந்தரங்கத் தோழி ஒருத்தியிடம் கொடுத்து அம்பிகாபதியிடம் அனுப்பினாள்.

அக்கடிதம் கண்ட அம்பிகாபதி ஆச்சர்யமுற்று தன் கண்களையே நம்பாது சந்தேகித்து அக்கடிதத்தை பன்முறை வாசித்தான். பின்பு ஒருவாறு தெளிந்து ஆனந்தமெய்தி அரசன் புதல்வியை சந்திக்க வேண்டுமென எண்ணினான். அவ்வமயம் அவளுடன் இளமையிற் கூடி விளையாடின காட்சிகள் பல அவன் கண்கள் முன் தாண்டவமாடின.

குறித்த நேரத்தில் குறிப்பிட்ட சோலைக்குப் புறப்பட்டான் அம்பிகாபதி. அச்சோலையில் புன்னை, கோங்கு, அசோகு, சண்பகம் முதலிய புஷ்ப

விருக்ஷங்களும், மா, பலா, விளா, தென்னை, கமுகு, கதலி முதலிய பல பழ விருக்ஷங்களும் அடர்ந்து சூரியனின் கதிர்கள் நுழைதல் அரிதாய் நன்றாய் தழைத்துச் செழித்துக் கொழுத்துப் பழுத்திருந்தன. அங்கு வீசின இளந் தென்றலும் ஆங்கு இருந்த அநேகவித புஷ்பங்களினின்று எழுந்த நறு மணமும் அம்பிகாபதியின் மனதைக் கவர்ந்தன. மேலும் அங்கிருந்த மரங்களின் கிளைகள் காற்றில் அசைவதானது அம்பிகாபதியை அன்புடன் கையசைத்து வரவேற்பது போன்றிருந்தது. கொடிகளினின்று ஆடும் புஷ்பங்கள் அவனுக்குத் தான் தேடிச்செல்லும் ஆரணங்கு இன்ன இடத்தில்தான் இருக்கின்றாள் என்று அவளிருக்கும் திக்கைத் தெரிவிப்பதை ஒத்திருந்தன. இவ்விதமாக உல்லாசமாக அம்பிகாபதி அச்சோலையின் கண் சென்றான்.

இவன் வருகையை ஆவலுடன் எதிர்பார்த்திருந்த அத் தையலும் இவனை எதிர் கொண்டழைக்க இவனை நோக்கி வந்தனள். வந்த நங்கையைக் கண்டனன் அம்பிகாபதி. அப்படியே ஆனந்த பரவசமடைந்து தேகம் புளகாங்கிதமடைந்து நின்றான் சிறுபோழ்து. பின்னர் தெளிந்து அவளை உற்று நோக்கினான். அவளும் இவனை நோக்கினள். இருவர் கண்களும் நட்புக் கொண்டாடின.

> 'கண்ணொடு கண்ணிணை நோக் கொக்கின்
> வாய்ச்சொற்கள் என்ன பயனுமில'

என்றபடி ஆனந்த மேலீட்டால் இருவரும் சற்று வாளாவிருந்தனர். அரசன் புதல்வி அடக்கமுடியா நாணத்தால் தலைகுனிந்து நிலங்கீறிப் பெருவிரல் நோக்கி நின்றாள். அதன்மேல் அம்பிகாபதி அவளைத் தழுவி அவளது அழகொழுகும் கன்னங்களில் முத்தம் வைத்தான். பின்னர் இருவரும் கூச்சம் தெளிந்து உரையாடி மெல்ல நடந்துபோய் ஆங்கு போடப்பட்டிருந்த ஓர் பளிங்காசனத்தி லமர்ந்தனர். அப் பெண்ணரசி அம்பிகாபதியுடன் உல்லாசமாக உரையாடினாள். பின்னர் ஒருவரை ஒருவர் விட்டுப் பிரிய மனமில்லாது பிரிந்து சென்றனர். நெடுந்தூரம் செல்லும்வரையும் இருவரும் திரும்பித் திரும்பிப் பார்த்து புன்னகை புரிந்து சென்றனர். அன்றுமுதல் இருவருக்கும் களவொழுக்கம் நடந்து வந்தது.

இது இவ்வாறாக இவர்களது களவொழுக்கத்தைப் பற்றி ஊரெங்கும் அலர் எழுந்தது. உலைவாயை மூடினும் ஊர்வாயை மூட முடியுமா! இச் செய்தி மெல்ல மெல்ல அரையன் காதிற்கும் எட்டிற்று. இதனை, அறிந்த அரசன் கம்பரை வருவித்து அவரிடத்தே யாவற்றையும் கோபமும் வருத்தமும் தோன்றக் கூறினன். கம்பர் மிகவும் மனநாணிப் பின்பு அவ்விதம் ஒன்றும் நடைபெற்றிராது எனச் சமாதானம் சொல்லிச் சென்றார்.

அரசன் கம்பரிடம் இதை மெய்ப்பிக்க வேண்டுமெனக் கருதித் தன் அமைச்சர்களுடன் கலந்து, ஓர் விருந்து வைக்க வேண்டுமெனத் தீர்மானித்து, அதற்காக ஒருநாளும் நிச்சயித்து, ராஜ்யத்திலுள்ள பல பிரமுகர்களுக்கும், மற்றுமுள்ள பலருக்கும் அழைப்பிதழ்கள் அனுப்பினான். விருந்தன்று சமையல் மிகவும் விமரிசையாக அமைந்திருந்தது. எல்லோரும் வந்து விருந்துண்ண அமர்ந்தனர். அவ்வமயம் அரசன் தன் மகளைப் பார்த்து யாவருக்கும் பரிமாறும்படி சொன்னான். அவ்விருந்தில் கலந்து கொண்டவர்களில்

அம்பிகாபதியும் ஒருவன் என நாம் சொல்லவும் வேண்டுமோ! தன் அருமைக் காதலி பொன் வட்டிலைக் கையில் ஏந்தித் தன் கால்களில் போடப்பட்டிருந்த சிலம்புகள் கலீர், கலீர் எனச் சப்திக்க மெல்ல அன்னநடை நடந்து வந்ததைக் கண்ணுற்ற அம்பிகாபதி தன்னையும் தானிருக்கு மிடத்தையும் அறவே மறந்து தன் காதலியின் இடை ஒடிந்து விழுந்துவிடுமோ என நினைத்து மனம் சகியாது உடனே,

"இட்டடி நோவ எடுத்தடி கொப்புளிக்க
வட்டில் சுமந்து மருங்கசைய",

என்றான். இதனைக் கேட்ட ஆங்கு குழுமியிருந்த யாவரும் திடுக்கிட்டனர். அவனது அருகில் அமர்ந்திருந்த கம்பர் பயந்து மேலே சொல்லப்பட்ட இரண்டு அடிகளையும் அம்பிகாபதி முடிப்பதற்குள் தான் அவனைத் தொடர்ந்து "கொட்டிக் கிழங்கோ" என்று கூறி மேலும் "கிழங்கென்று கூறுவாள் நாவில் வழங்கோசை வையம் பெறும்" எனப் பாடி அம்பிகாபதியின் கவியை முடித்தனர். அப்பொழுது சாரதா தேவியின் அருளினால் வெளியே ஓர் கிழவி கொட்டிக் கிழங்கோ கிழங்கென்று கூவி விலை கூறி வந்தனள். இதைக் கண்ட கம்பர் ஆங்குள்ளவர்களுக்குத் தன் மகன் அக் கிழவி கொட்டிக் கிழங்கு விலை கூறி வரும் சிறப்பைக் குறிப்பிட்டான் என்று சொல்லி முடித்தனர். கள வொழுக்கம் நடப்பது உண்மையென அம்பிகாபதியின் முதலிரண்டடியினின்று தெரிந்து கொண்ட அங்குள்ளார் அனைவரும் கம்பர் அவ்விதம் கூறிய பின்னர் சற்று சமாதான முற்றனர். விருந்து வெகு சிறப்பாக முடிந்தது.

பின்னர், யாவருக்கும் சந்தனமும் தாம்பூலமும் வழங்கப்பட்டது. விருந்தினர் பலரும் சந்தனம் பூசி தாம்பூலம் தரித்த பின் வேடிக்கையாக சற்று பேசலாயினர். ஆனந்தமாக சந்தனம் நிறைய பூசி அம்பிகாபதியும் அவர்களுடன் கலந்து உரையாடிக் கொண்டிருந்தான். திடீரென அரசன் அம்பிகாபதியை அழைத்துத் தன் மகளிருக்கும் அறைக்குட் சென்று அங்கிருக்கும் கனி வர்க்கங்களை எடுத்து வந்து யாவருக்கும் வழங்கும் வண்ணம் கட்டளை யிட்டான். சாப்பாட்டிற்குப் பின் தன் காதலியைப் பார்க்கக் கொடுத்து வைத்த பாக்யமே பாக்யம் என நினைத்து ஆனந்தங் கொண்டு அறைக்குட் சென்று மன்னன் புதல்வியைக் கண்டதும் மோகங் கொண்டு அவளுடன் உரையாடிப் பின்னர் அவளைக் கட்டித் தழுவி பல முத்தங்கள் வைத்து கனி வர்க்கங்களை வாரி எடுத்துக் கொண்டு விரைவில் அரசனிடம் வந்து சேர்ந்தான். அவனது மார்பில் சந்தனம் பூசப் பட்டிருந்ததினாலும், அவன் அரசன் மகளைக் கட்டித் தழுவியதனாலும் அவள் அணிந்திருந்த சரப்பளி முதலிய பல அணிகளின் சுவடுகள் அவனது மார்பில் பதிந்திருந்தன. இதைக் கண்ணுற்ற பெண்ணரசி பல குறிப்புகள் செய்தும் அம்பிகாபதி வாளா விருந்து விட்டான். அரசன் அங்கு நிறைந்திருந்த பல சான்றோர்களை நோக்கி, அவனது மார்பைப் பார்க்கும் வண்ணம் கூறினன். யாவரும் கண்ணுற்று அரசன் புதல்விக்கும் அம்பிகாபதிக்கும் கள வொழுக்கம் நடப்பது உண்மையே என்பதை நிச்சயித்தனர்.

உடனே அரசன் அம்பிகாபதியை விளித்து, "நீ சிற்றின்பம் சிறிதும் கலவாமல் பேரின்பம் வெளிப்படவே நூறு பாட்டுகள் பாடவேண்டும். அங்

னை யின்றி அவற்றில் ஒன்றிலேனும் சிறிது சிற்றின்பம் கலந்திடுமாயின் கொலை செய்வேன்; சரியாகப் பாடி முடித்தால் என் புதல்வியை உனக்கு விவாகம் செய்விப்பேன்'' என்று கூறி இப்பொழுதே பாட வேண்டும் என்றனன். இதனைக் கேட்ட கம்பர் மிகவும் வருந்தினர். அம்பிகாபதி அச்சமற்றுத் தன் இஷ்ட தெய்வத்தை துதி செய்து தைரியம் கொண்டு செய்யுட்கள் வெகு அழகாக அன்பு ததும்பும்படி எடுத்த முறை தவறாது பேரின்பமாகவே பாடிக்கொண்டு வந்தான். இன்னும் ஒரே பாட்டுத்தான் மீத மிருந்தது. அந்தோ! அவன் விதிதான் என்னே! விதியை வெல்ல யாரால் முடியும்! எஞ்சிய பாட்டையும் பாடி முடித்திருப்பான், ஆனால் அவன் காதலி, அரச குமாரி, தன் காதலன் காப்புச்செய்யுள் பாட ஆரம்பித்ததும் தன் கழுத்தில் அணிந்திருந்த அழகிய நூறு முத்துக்களாலாகிய மாலை ஒன்றை அறுத்துக் கையில் வைத்து ஒவ்வொரு பாட்டு முடிந்ததும் ஒவ்வொரு முத்தை எடுத்து வைத்துக் கொண்டே வந்தனள். அவள் காப்புச் செய்யுளையும் சேர்த்துக் கணக்கிட்டாள். அப்பேதை மங்கை காப்புச் செய்யுள் அந்நூறு பாட்டிற்குப் புறம்பென்பதை அறியாள். தன் காதலனின் வெற்றியைக் கண்டு மகிழ்வெய்தி அதைத் தெரிவிக்கும் வண்ணம் தனது அறையினின்றும் தலையை நீட்டினாள். இவளைக் கண்டதும் அம்பிகாபதி அக்கணமே சிற்றின்பப் பொருள் வரும் வண்ணமும் அவளது அழகை விவரித்தும்,

> 'சற்றே பெருத்த தனமே குலுங்கத்தரள வடம்
> முற்றே அசையக் குழை யூசலாடத் துவர் கொள் செவ்வாய்
> நற்றே னொழுக நடன சிங்கார நடை யழகின்
> பொற்றே ரிருக்க தலை யலங்காரம் புறப்பட்டதே'

என எஞ்சிய பாடலைப் பாடி முடித்தான். உடனே அரசன் சினந்து கடைசிப் பாடல் தவறெனக் கூறி அவனை (அம்பிகாபதியை) கழுவிலேற்றி கொலை புரியும்படி கொலை களத்திற்கனுப்பினான். கம்பரும் மனங் கலங்கி அவன் பின் சென்று அவனைக் கட்டித் தழுவி கண்ணீர் விட்டு அவன் இறந்த பின் வீடு திரும்பினர்.

அம்பிகாபதி இறந்தானெனக் கேட்ட அரசன் புதல்வியும் ஆற்றொணாத் துயருற்று காதலனுக்குப் பின் வாழ்தல் தகுதியல்ல வென்று தன் உயிரை தீ மூட்டி அதில் இறங்கி மாய்த்துக் கொண்டு வானுலகில் அம்பிகாபதியைச் சந்திக்கச் சென்றனள். இவ்வுல கிருந்தவா றென்னே! விதியின் பயனே பயன்.






# 51. இங்கிலாந்தின் பிந்திய காலத்திய ஐரோப்பிய நடவடிக்கைகள்

(T. S. ராஜகோபாலன், B. A., L. T.)

சரித்திர ஆரம்பத்திலிருந்து கவனிக்கு மிடத்து, சுமார் 1660-ம் வருஷத்திலிருந்து 1815-ம் வருஷம் வரையில் இங்கிலாந்தும் பிரான்சும் விரோத பான்மையிலேயே இருந்து நேர்முகமாயும் மறை முகமாயும் ஒன்றுடனொன்று போரிட்டே வந்து கடைசியாக நெப்போலியனை மூறியடித்துச் சிறை பிடித்த போது ஒருவாறு அப்போதைய விரோதம் முடிந்ததெனலாம். அதற்கு இடையில் நடந்தவை தாம் ஸ்பெயின் வார்சு யுத்தம், ஆஸ்டிரிய வார்சு யுத்தம், ஏழாண்டுப் போர், அமெரிக்க சுதந்திர யுத்தம், பிரஞ்சுப் புரட்சி யுத்தம், நெப்போலிய யுத்தம் என்ற விபரம் வாசகர்கள் உணர்ந்திருப்பார்கள். அமெரிக்க குடியேற்ற நாடுகளை இழந்ததி லிருந்து, கூடுமானல் சண்டைகளில் நேர்முகமாகக் கலந்து கொள்ளாமல் இருந்து விடுவதென்ற கொள்கை அனுஷ்டானத்திற்கு வர ஆரம்பித்தது என்று சொல்லலாம். (சமீபத்தில் ஸ்பெயின் கலகம், அபிஸீனிய யுத்தம் இவைகளில் இங்கிலாந்தின் மனோபாவம் சகலரும் அறிந்ததேயாகும்.) தீராத முறையில் தங்களுடைய சுய நலத்திற்குப் பங்கம் ஏற்பட்டு விடும்போது—சென்ற ஐரோப்பிய யுத்தத்தில் ஜெர்மனியுடன் போரிட்டுத் திணறியதும், இந்தியர்கள் செய்த அரும் பெரும் சேவைகளும் நாம் எல்லாரும் அறிந்த விபரமேயன்றோ ?—இங்கிலாந்து சண்டையில், கலந்து கொள்ளும். (சுய நலத்திற்குப் பங்கம் வந்த விடத்தும் கூட, பல்லைக் கடித்துக் கொண்டு, அடிமேல் அடிகள் தொடர்ந்து விழுந்து கொண்டிருக்கும் போது கூட, "என்ன அடிப்பாய் போலிருக்கிறதே ? அடிக்கவும் வருகிறாய் போலிருக்கிறதே? அடித்தால் தெரியும் சமாசாரம்? ஏது, அடியும் மேலே விழுகிறது போலிருக்கிறதே ? இருக்கட்டும் சொல்லுகிறேன். என்னைச் சேர்ந்தவர்கள் வரட்டும். அவர்களை விட்டு அடிக்கச் சொல்லி விட்டு, நான் உள்ளே யிருந்து ஜன்னல் வழியாகப் பார்த்துக் கொண்டிருக்கிறேன். யானைக்கு ஒரு காலம் இருந்தால் பூனைக்கு ஒரு கால முண்டல்லவா? முண்டனுக்கு இரண்டு ஆள், தெரியுமா!" என்று பேடிக் கூச்சல் போட்டு வாளா விருக்கும் ஒரு நிலைமையை நாம் உற்று நோக்கும் காலத்து, பரிதாபப்பட வேண்டிய நிலைமை தான் என்பது வெளியாகும். உண்மை, நேர்மை, நியாயம் என்பது இல்லாமல் தந்திரத்தால் மட்டும் எவ்வளவு காலம் நிர்வகிக்கலாம் ? சமூத்திராதிக்கம் காற்றில்

பறக்கிறது. தந்திரம் தவிக்கச் செய்கிறது. மானம் கௌரவம் என்பனவோ வெறும் கனவாகி விட்டன! இந்த நிலைமை ஏறத்தாழ நெப்போலியனுடைய முயற்சிகளாலேயே ஏற்பட்டு விட்டன எனலாம். இதர தேசங்களும்—அதிலும் ஜெர்மனி, ரஷ்ஷியா, ஜப்பான், இட்டாலி, அமெரிக்கா சரியான அபிவிருத்தி பெற்று விட்டபிறகு—இங்கிலாந்து பாடு திணறல் தான் என்பது பிரத்தியக்ஷமாகிறது.

நிற்க நெப்போலியன் ஒழிந்த பிறகு தேசத்தின் உள் நாட்டு ஜோலிகள் பல இருந்தன. குழப்பங்கள் மிகுந்தன. ஆகவே ஜார்ஜ் IVன் காலத்தில் ஐரோப்பாவில் துருக்கியரின் ஆதீனத்திலிருந்த கிரேக்கர்கள் சுயேச்சை பெற விரும்பி சண்டை துவக்கினராம்! ஏனெனில் துருக்கியின் அரசாங்கத்தில் கிருஸ்தவ கிரேக்கர்கள் துன்புறுத்தப் பட்டனராம்! ஆகவே சுதந்திரத்திலும், நியாய ஸ்தாபனத்திலும் சுவபாவமாகவே பற்று நிறைந்திருந்த ஆங்கிலேயருக்கு கிரேக்கரிடம் அனுதாபம் ஏற்பட்டு விட்டதாம்! அப்படி ஆங்கில மேதாவிகளில் கவி சிரேஷ்டரான பைரன் பிரபு (Lord Byron) ஒருவராம். சுதந்திரத்தின் சார்பாக யாத்திரை செய்து கிரேக்கர்களின் பொருட்டு உயிரை விட யுத்தத்தில் கலந்து கொள்ளச் சென்றாராம்! சென்றவருக்கு ஜுரம் வந்து, காலன் வாய்ப்பட சேர்ந்து சுராகி விட்டாராம் 1825-ல். இந்தச் சண்டை நவாரினோ (Navarino) என்ற விடத்தில் நடந்ததாம்!!

இந்தச் சண்டை கிறிஸ்தவரல்லாத துருக்கரின் ஆதிக்கத்தை ஐரோப்பாவினின்றும் அறவேயொழிக்க எண்ணி ருஷ்ஷியர்கள் கிரேக்கருக்கு உதவிபுரிந்தனராம்! ஆனால், ஆங்கில டோரிகள், துருக்கி ஒழிந்துவிட்டால் அதனருகிலுள்ள கருங்கடல் மார்க்கமாக ருஷ்ஷியாவின் செல்வாக்கு சிறந்து, மத்தியதரைக் கடலுக்குள் வியாபித்து ஆங்கிலேயரின் சர்வாதிக்கத்திற்கு ஆபத்து வந்துவிடும் என்ற எண்ணத்தினால், துருக்கிக்கு உதவி செய்வது தான் சாலச் சிறந்ததெனச் சிந்தித்தனராம்! என்ன ராஜீய தர்மம், மதப்பற்றுதல், துருக்கியின் க்ஷேமத்தில் பரிவு என்பதை சிந்தித்து உணரற்பாலது ஆகும். ருஷ்ஷியாவை முன்னேற வொட்டாமல் இருப்பதற்காக மட்டும் துருக்கியிடம் பரிவு. துருக்கியைத் தட்டிக்கொடுத்து ரஷ்ஷியாவுக்கு 'எத்தான் செட்டி'யாக ஆக்கிவைக்க வேண்டியது. (இதே மனப்போக்குத்தான் நீடித்து இருந்து வந்திருப்பதை தேசிய முஸ்லீம்கள் அறிந்திருப்பது போல் பிறரும் உணர்ந்து விட்டால் பிறகு வேண்டுவது என்ன இருக்கிறது?) இது கிரேக்க சுதந்திர யுத்தம் எனப்படும். இதில், அப்போதைய பிரதமமந்திரி டோரிகளின் எண்ணத்திற்கு மாறாக, ருஷ்ஷியருடன் சேர்ந்து கிரேக்க சுவதந்திரத்தை ஸ்தாபித்தார் எனச் சொல்லப்படுகிறது.

ஆனால் அடுத்து 1855-ல் ஏற்பட்ட க்ரீமியப் போரில் ஆங்கிலேயர் நிச்சயமாக ருஷ்ஷியாவை எதிர்த்து துருக்கியுடன் சேர்ந்து யுத்தம் செய்தனர். இந்த யுத்தத்தின் பெரும்பாகம் கருங்கடலின் வடக்கே ருஷ்ஷியாவின் தென்கரையில் ஒட்டியுள்ள க்ரீமியன் தீபகல்பத்தில் நடந்ததால் இதற்கு "க்ரீமியன் போர்" (The Crimean war) என்று பெயர். இப்போது, பால்மர்ஸ்டன் பிரபு என்பவரும் ஜான் ரஸ்ஸல் பிரபுவும் சேர்ந்து கலப்பு மந்திரி சபையை யமைத்திருந்தனராம். (The coalition ministry of Lord John Russel and Lord Palmerston) இந்த யுத்தம் அப்போது இங்கிலாந்

தின் உன்னத நிலையைக் கலக்கிக் குழப்பிய "கிழக்குப் பிரச்னை" (The Eastern question) சம்பந்தமாகச் செய்த யுத்தமாகும். அந்தப் பிரச்னை யாவது, ஐரோப்பியரல்லாத ஆசியாக்காரரான துருக்கர்களின் ராஜ்யம் ஐரோப்பாவில் வைத்துக்கொள்ளப் படவேண்டுமா? அல்லது ஒழித்துவிடப் படவேண்டுமா? என்பதேயாகும். சுமார் 15-ம் நூற்றாண்டில் ஐரோப்பாவில் நுழைந்து பலமாக ஸ்தாபனமான துருக்கர்கள் நாளடைவில் தங்கள் புஜபல பராக்கிரமத்தால் பல வெற்றிகளை யடைந்து, கிழக்கு ஐரோப்பா பூராவிலும் வியாபித்துப் பெரிய சாம்ராஜ்யத்தை ஸ்தாபித்திருந்தார்கள். அதுமட்டு மல்லாமல் ஆப்பிரிக்காவின் வடபாகம் பூராவிலும் வலுவடைந்திருந்தனர். இது கிறிஸ்தவ ஐரோப்பியரின் கண்களை உறுத்தி, மனதைப் புண் படுத்தியதுடன், கௌரவத்திற்கே ஹானியாகவும், மிக்க அவமானகரமான விஷயமாகவும் நினைக்கப்பட்டது என்பது சரித்திர பூர்வமான உண்மை! ஆகவே அந்த துருக்க சாம்ராஜ்யத்தை எவ்விதத்திலாவது சிதைத்து, சின்னா பின்னமாக்கி, சீரழித்து ஐரோப்பாவில் தலை காட்டாது செய்வது ஐரோப் பியரின் அந்தரங்க விருப்பம். அதற்கான நயவஞ்சகக் கட்சிகள் அப்போதப் போது தோன்றுவதும், "பகையாளிக் குடியை உறவாடிக் கெடுப்பது போலும்" "அனுகூலச் சத்துருக்களாகப் பலபல சந்தர்ப்பங்களில் பலபல கக்ஷிகளையும், குழப்பங்களையும், கலகங்களையும், தூண்டுதல்களையும், அனுதாப விளம்பரங்களையும், கொள்கைகளையும் கையாண்டார்கள். துருக்கியை ஒழிக்க வேண்டியது என்ற ஒரு கக்ஷி! தங்கள் கீழுள்ள கிறிஸ்தவக் குடி ஜனங்களைத் துன்புறுத்துகிறார்கள் என்பது மற்றொரு கட்சி! ஆனால் பிரதேசங் கள் வலுத்து விடா வண்ணம் துருக்கி காப்பாற்றப் படவேண்டும் என்பது வேறொரு கக்ஷி! காப்பாற்றினாலும், சக்தி யில்லாமல் பும்ஸத்வம் அற்று நோயாளி போல் வைத்திருக்கப் படவேண்டும் என்று மற்றுமொரு கக்ஷி! இந்த மாதிரி நாளடைவில் காரியங்கள் நடத்தி வரப்பட்டு பிரஸ்தாப 19-ம் நூற்றாண்டின் மத்தியில், துருக்கியை கடைசி நிலைமையில் வைத்து, ராஜ தந்திர நிபுணர்கள் துருக்கியை "ஐரோப்பாவின் நோயாளி" (The sick man of Europe) என்ற பரிபாஷையாக குறிப்பிட்டுப் பேசினார்கள் என்ற உண்மை விஷயத்தை எந்த ஒரு சாதாரண ஐரோப்பிய சரித்திரத்திலும் காணலாம்! ஆங்கிலேயரும் ஒரு பெருமையாக தங்களுடைய சரித்திரங் களில் எழுதி வைத்து, அவ்வித துர்த்தசையிலிருந்த துருக்கியருக்குக் கை கொடுத்த பெருமையைக் கைக்கொள்ளுகிறார்கள். "ஐரோப்பாவின் வியாதியஸ் தனை எப்படி முடிவு கட்டுகிறது?" (How to dispose of the sick man of Europe) என்றே ஐரோப்பிய அரசியல் வாதிகளின் கூட்டங்களில் குறிப் பிட்டுப் பேசி வந்தார்கள். அந்தப் போக்கிலேயே இன்றளவும் காரிய நிர் வாகம் இருந்து, தற்சமயம் துருக்கிய சாம்ராஜ்யம் என்பது "கான்ஸ் டாண்ட்டிநோபிள்" (Constantinople) என்ற பட்டணமும், அதைச் சுற்றியுள்ள சில மைல் மட்டும் உள்ள நகரமும் தான் என்பது யாவரும் கண்கறி யக் கூடிய விஷயம். (ஊர்களே இல்லாமல் பட்ட ராஜாக்களுக்கு இந்த ராஜா மேலல்லவா?) ஆனாலும் 'கடுகு சிறுத்தாலும் காரம் போகாது. யானை படுத்தாலும் குதிரையின் உயரம் இருக்கும். தக்கோர் தம் தம் தனஞ் சிறிய ராயினும் மனஞ் சிறியராவரோ" என்ற விசேஷப் பெருமையை குஜூப்படுத்தும் சாக்ஷியாகவே துருக்கி சுல்தான் இருந்து வருகிறார் என்பது ஆசியாவுக்கே ஒரு பெரும் மதிப்பைத் தாக் கூடிய விஷயமாகும்.)

நிற்க துருக்கியின் ஆதிக்கத்தி லிருந்து தப்ப சில நாடுகள் விரும்பி ரஷ்ஷியாவின் உதவியை நாடினவாம். ரஷ்ஷியா உடனே கத்தியை உருவிக் கொண்டு புறப்பட்டு விட்டதாம். இனம்பினால் ஆங்கிலேயருக்கு அப்போது வளர்ந்து கொண்டு வந்த இந்திய சாம்ராஜ்யத்திற்கு ஹானி வந்து விடுமாம். ஆகவே ஆங்கிலேயர் உடனே அனாத ரக்ஷகர்களாய் இளம்பி துருக்கியின் சார்பாகச் சண்டை செய்தனராம். "கஷியில் சேர்ந்து கழுவாய் கரைப்பது" என்பார்களே அதுதானோ என்னமோ! ஏனெனில் ருஷ்ஷியாவின் ஆதிக்கம் வெகு சுருசுருப்பாய் ஆசியாவின் வடக்கு பூராவிலும் வியாபித்து ஆசிய துருக்கியில் பரவி ஆப்கானிஸ்தான எல்லையை எட்டி விட்டது. அவர்களுக்கு சமுத்திரக் கரை இல்லாமல் கருங்கடலில் நுழைந்து, அங்கே பலப்படுத்திக் கொண்டு, மத்தியதரைக் கடலுக்குள்ளும் கலந்து வியாபாரப் போட்டிக்குத் தலைப்பட்டார்கள். அப்போது அதைத் தடை செய்து தங்கள் கட லாதிக்கத்தையும் சாம்பிராஜ்யத்தையும் எல்லாவற்றிற்கும் மேலானதும், பிராணாதார மானதுமான வியாபாரத்தையும் காத்துக் கொள்ளுவது மிக மிக அவசியமாகி விட்டது. ஆகவே இங்கிலந்தும், பிரான்ஸும் (வெகு விநோதமாக முதல் தடவையாக) சேர்ந்து, ருஷ்ஷியாவுக்கு எதிராக துருக்கியுடன் சேர்ந்து சண்டை செய்தன என்பது சரித்திரம். சண்டையில் முக்கிய சம்பவங்கள், பாலகலாவா, இங்கர்மான் என்ற விடங்களில் நடந்த சண்டைகளும், ஸெபாஸ்டபூல் என்ற கோட்டையை முற்றுகையிட்டதும்தான் என்று சொல்லப்படும். இந்த சந்தர்ப்பம் மிகக் குளிர் காலம் ஆனதால் குளிரினாலும் பல யுத்த மிகுதியினாலும் வீரர்கள் காயம் பட்டு, உயிரிழந்து, கஷ்டப் பட்டனர். அவர்களுக் குதவி செய்ய வென்று சென்று உழைத்த மிஸ். பிளாரன்ஸ் நைட்டிங்கேல் என்ற உத்தமிக்குக் கீர்த்தி ஏற்பட்டது. தவிரவும் 600 வீரர்களே கொண்ட ஒரு சிறு படையை முன்பின் யோஜனையின்றி ஒரு குருட்டுத்தலைவன் முன்னேற உத்தர விட்டானாம். அவர்கள் உயிரையும் வெறுத்து, துணிந்து, தலைவன் கட்டளையை நிறைவேற்றுவதையே கடமையாகக் கொண்டு, ஆபத்தில் இறங்கி பெரும்பாலோர் மாண்டு மடிந்து, சிறு பாலோர் மீண்டனர் என்ற சம்பவம் கவிதையாக்கப் பட்டு, நம் பிள்ளைகளும் மனப்பாடம் செய்து வருகின்றனர். (The Charge of the Light Brigade) என்பதும் குறிப்பிட வேண்டிய விஷயம். கடைசியில் 1856-ல் சமாதானம் ஏற்பட்டது. முக்கிய ஷரத்து, கருங்கடலில் ருஷ்ஷியர்கள் கப்பல்களை நிறுத்தி வைக்கக் கூடாது என்பதாகும். இது முடிந்து மூச்சுவிட நேரம் ஏற்படுவதற்குள் தான் இந்தியாவில் முதல் சுயாதீனப் போர் என்ற பெரிய சிப்பாய் கலகம் 1857 ஏற்பட்டு, கம்பெனி யாட்சிக்கு முடிவு கட்டப்பட்டு மஹாராணியின் ஆக்ஷி இந்தியாவுக்கு ஏற்பட்டது.

மற்றப்படி இந்தப் பால்மர்ஸ்டன் பிரதம மந்திரியாக இருந்த போது தான் ஆஸ்ட்ரியாவின் கொடுங்கோன்மையில் அல்லல் பட்டு அழுது கொண்டிருந்த இடாலியர் சுயேச்சை பெற, உதவி செய்தாராம். பல இடாலிய சிறு ராஜ்யங்கள் ஒன்றுபட, மாஜினி, கரிபால்டீ முதலிய உத்தம தேசபக்த வீர சிகாமணிகளின் முயற்சிகளும் நடந்து, "வாலிப இடாலி" (The young Italy) இயக்கமும் கரிபால்டீயின் செஞ் சட்டையினர் இயக்கமும் பிறந்து பரவி போராடின. ஆனால் நமது புனித அஹிம்சைப் போருக்கு எதுவும்

கூடாகாது. (இச் செஞ் சட்டையினர் செய்கையாக கருதித் தான், எல்லைப் புற காந்தியின் அஹிம்சைச் செஞ் சட்டைத் தியாக வீரர்களையும் பலவித கஷ்டங்களுக்கு அரசாங்கத்தினர் ஆளாக்கினர் என்பது குறிப்பிடத் தக்க விஷயம்) அப்பொழு தெல்லாம், ஏன் இன்றும்கூட, கஷ்டப் பட்டவர்களின் பங்காளர்களாகத் தான் ஆங்கிலேயர் நடப்பதாகப் பறை சாற்றுகின்றனர்.

நெப்போலியன் வீழ்ச்சிக்குப் பிறகு பிரான்ஸில் ஏற்படுத்தப் பட்ட முடியரசுக்கு மறுபடியும் ஆபத்து நேர்ந்து, குடியரசு ஸ்தாபிக்கப்பட்டு நெப்போலியனுடைய பேரன் முன்னணிக்கு வந்து நெப்போலின் III ஆக ஆகி, மறுபடியும் பிரஞ்சுக் சக்ரவர்த்தியாகி விட்டான் என்பதும், மறுபடியும் பிரஷ்ஷியாவுடன் ஒரு பெரும் போர் நிகழ்ந்தது என்பதும் குறிப்பிடப் படவேண்டிய விஷயம். அதன் பலன் பிரான்ஸூக்குத் தோல்வி தான். நெப்போலியன் III முடியிழந்தான். முடிவாகவும் ஸ்திரமாகவும் பிரான்ஸூக்கு குடியரசேதான் என்ற ஏற்பாடாகி இன்றளவும் நடைபெற்று வருகிறது. பிரஷ்ஷிய சிற்றரசுகள் பல ஒன்று கூடி, பிரஷ்ஷிய அரசன் வில்லியம் என்பவரைத் தங்களுக்குச் சக்கரவர்த்தியாக்கிக் கொண்டனர். ஆகவே இங்கிலாந்து, பிரான்ஸ், ஆஸ்ட்ரியா, ரஷ்ஷியா, இடாலி முதலியன பல தேசங்களாக ஆகி ஒருவகைப்பட்ட ஜனங்கள் கொண்டனவாக ஆகின. அதுவே உலக சமாதானத்தைச் சிதைக்க ஆன ஒரு பெரும் சக்தியாகவும் ஆகிவிட்டது அனுபவமான பிரத்தியக்ஷம். நெப்போலியனுடைய உயர்வினால் ஐரோப்பாவில் உண்டான தேசீய உணர்ச்சி வலுத்து ஒவ்வொரு வகை ஜனங்களும் ஒரு உணர்ச்சி பெற்றவர்களாகி விட்டனர் என்று ஐரோப்பிய சரித்திரம் கூறுகின்றது.

இதற்கடுத்து, பிரதானமாக எகிப்து விஷயங்களும் தென்னாப்பிரிக்கா விஷயங்களும் அடங்கிய ஒரு தொடர்ச்சி எழுதப்படும்.

---

# நோக் கெனும் பாசம்

(S. ராமசாமி ஐயங்கார்)

'நோக் கென்ப தழகு பார்வை' என்பது நிகண்டு. இவ் விடத்துப் பார்வை என்பது பொருள். பாசம் என்பது இங்கு கயிறெனப் பொருள்படும்.

கண்பார்வை பலதிறப்படும். குளிர்ந்த பார்வை சில. இப் பார்வையில் அன்பு ததும்பி நிற்கும். ஓர் தாய் தன் மகவை அன்புடன் நோக்கும் நோக்கிதாம். ஒத்த அன்பின் வயத்தானோர் நோக்கு மீதேயாம். அருள் நோக்குமிதன் பாலதேயாம். காந்திஜீயின் அருள் நோக்கிற் கிலக்கானோரிதை நன்கறிவர். கம்ப நாட்டாழ்வாரும் 'வேரியங் கமலை நோக்கும்' என அருள் நோக்கின் விசேடத்தைக் கூறிப் போந்தார். சாந்தம், சமாதானம், சாத்வீகம் யாவற்றையும் கலந்து காட்டும் இயல்பது இந் நோக்கு.

சில கொடும் பார்வையாம். இதற்கிலக் கானோர் அனல் பட்டு வாடும் கொடியே போல்வார். பெரும்பாலும் இது தம்மினும் பல் வகையில் வலியோர் பால் நிகழ்வது. இப் பார்வை அச்சத்தையும், திகிலையும், சமாதான மற்ற நிலைமையையும் உண்டாக்க வல்லது. இதன் பெயருக் கேற்ப கொடிய சுபாவம் வாய்ந்தது.

சில பார்வையில் விஷத்தன்மை கூடி நிற்கும். இது நோக்கப்பட்டோர் உடலுக்கு ஊறு செய்வதாகும். 'திருஷ்டி தோஷம்' எனக் கூறுவதும் அத் தோஷங் கழிப்பதற்கான செய்வதி லிருந்தே இப் பார்வையின் தன்மை அறியக் கிடக்கிறது. குழந்தைகளுக்கு உணவூட்டுங்கால் அவ் வுணவைப் பிறர் பார்த்தல் கூடா தென்பது நம்மவர் வழக்கு.

அச்சப்பார்வை, அலக்ஷியப் பார்வை, வீரப் பார்வை, இராஜபார்வை என்பவை பார்வைகளில் மற்றும் சிலவாம். அவை அவ்வப்பதப் பொருட் கேற்ற தன்மை வாய்ந்தவை. 'சர்வேந்திரியாணும் நயனம் ப்ரதானம்' என்றார் வட மொழியாளர். என்னை யெனின் நயனங்களினின்று தோன்றும் பார்வை பல செயலாற்ற வல்லது. அத்துட னமையாது முகவேறு பாட்டிற்கும் காரணமாகிறது. இவை பொதுவாக ஆண் பெண் இரு பாலர்க்கும் உரித்து.

பெண் பாலர்க்கே உரித்தான பார்வை குறித்துத் தமிழ் மறையாங் குறள் மிக அழகாகக் காட்டி நிற்கின்றது. அவற்றுள் சில கீழே குறிப்பிடுதல் மிகையாகா.

'அழகுடைய இவள் என் பார்வைக்கு எதிர்ப் பார்வை பார்த்தால் ஒரு தெய்வப் பெண் தன் சேனையுடன் வந்து என்னைத் தாக்குதல் போல்வது.'

'நான் கூற்றின் வடிவத்தை முன்பு கண்டறியேன். இன்று அது ஒரு பெண் தன் கண்களால் ஆடவர் மேல் போர் செய்யும் வடிவம் உடையது எனக் கண்டறிந்தேன்.'

'இந்தப் பெண் கண் பார்வையானது என்னை வருத்தலால் கூற்றம் போலவும் இருக்கிறது.'

'பிணையேர் மடநோக்கு' என ஓர் தலைவன் கூற்றாக அமைந்திருக்கின்றது.

இனி காதல் நோக்கைச் சிறி தாராய்ந்து கம்பநாடர் இது பற்றிக் கூறியிருப்பதைக் கவனிப்பாம். ஒத்த வயதும், ஒத்த குணமும், ஒத்த வழகும், ஒத்த அன்புமுள்ள நம்பியும் நங்கையும் ஒருவரை யொருவர் அன்பினுணர்ச்சி ததும்ப காதல் வயப்பட்டு நோக்கும் நோக்கே காதல் நோக்காம். 'கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின், வாய்ச் சொற்க ளென்ன பயனுமில' என்னும் பேருரையால் இப் பார்வையின் அரியதன்மை ஈதென்பது அறியற் பாலது.

இராம பிரானும் சீதாப் பிராட்டியும் கொண்டு களித்த காதல் நோக்கைக் கம்பநாட்டாழ்வார் மிக மிக அழகு பெற எழுதி யமைத்திருக்கிறார்.

இராமன் மிதிலா நகரத்தைக் கண்ணுற்றுச் சென்றார். யானைகள் போர் புரிவதையும், கொடிகள் ஆடுவதையும் கண்டு மகிழ்ந்து சென்றார். செந்தாமரை மலர் போன்று பொலிந்து காண்கின்ற பொன்மதில் சூழ்ந்த மிதிலா நகருக்குள் பிரவேசித்தார். நெடிய வீதி கடை வீதி முதலிய வீதிகளை கடந்து சென்று இராஜ வீதியை அடைந்தார். ஜனக மஹாராஜன் அரண்மனையைக் கண்டார். கன்னிகா மாடத்தினருகில் அன்பின் மிக்க பேடொடு ஆணன்னங்கள் ஆடும் மூன்றில் கண்டு அவ் விடத்துச் சமீபமாய் நின்றார். அது போழ்து அரண்மனைக் கன்னிகா மாடத்தில்,

"உமையா ளொக்கும் மங்கைய ருச்சிக்கரம் வைக்கும்
சுமையாள் மேனி கண்டவர் காட்சிக் கரைகாணார்
இமையா நாட்டம் பெற்றில மென்றா ரிருகண்ணால்
அமையா தென்றா ரந்தரவா னத்தவ ரெல்லாம்.

என்று புகழத்தக்க அழகமைந்த பெண்ணும் சீதாபிராட்டி வந்து நின்றாள். தன் மேனி யழகாலும் இன் சொலாலும் யாவரையும் ரமிக்கச் செய்யும் விசேடத்தால் இராமன் என்று பேர் படைத்த அழகனும் பிராட்டியா மழகியும் ஒருவரை யொருவர் நோக்கினர். இந் நோக்கின் மாண்பை கம்பர் மிக அழகு பெறக் கூறுகின்றார்.

"எண்ணரு நலத்தினா ளிணைய ணின்றுழி
கண்ணொடு கண்ணிணை கவ்வி யொன்றை யொன்
றுண்ணவு நிலைபெறா துணர்வு மொன்றிட
அண்ணலு நோக்கினா னவளு நோக்கினாள்.'

நினைத்தற்கு மரிதான அழகையுடைய சீதாபிராட்டியார் அங்கு நின்ற காலத்தில் ஒருவர் கண்களோடு மற்றொருவர் கண்ணிணைப் பற்றி ஒன்று ஒன்றினை

மற்றொன்று அனுபவித்துக் கொண்டிருக்கவும் தத்த மிடங்களில் நிலை பெற்றிராமல் இருவரறிவும் ஒற்றுமைப் படும்படி இராமபிரானும் நோக்கினர்; சீதாபிராட்டியும் நோக்கினு ளென்பதாம். இந் நிலை பார்த்தற்குஞ் சொல்லுதற்குமே யன்றி நினைத்தற்கு மரிது. காம மேலீட்டை யுடைய ராயினும் மாதர் ஆடவரை முன்பு நோக்க லாகா தென்பது தோன்ற 'அண்ணலு நோக்கினு ளவளு நோக்கினள்' என்ற நயம் பெரு மகிழ்ச்சி தருவதாகும். இப் பார்வைகள் இருவரையும் ஓராவிற் கிரு கோடுபோல ஒருவயப் படுத்தின. சீதா பிராட்டியி னுடைய இரு கண்களி னின்றுந் தோன்றிய பார்வை இரு கூரிய வேலே போன்று மிக்க உரம் பொருந்திய இராமபிரான் மார்பகத்தே சென்றாழ்ந்தன. உரம் பொருந்திய மார்பகம் ஓர் இரும்புப் பெட்டியே போன்றதாம். அதனுள்ளிருக்கும் உள்ளமாகிய சொத்தைத் தனக்கு உரித்தாக்கிக் கொள்ளத் தன் பார்வையாம் திறவுகோல் கொண்டு திறக்க முயல்கின்றார் பிராட்டி. சீதாபிராட்டியின் உள்ளத்தைக் கவர இராமபிரானும் அதே தொழிலி லீடுபடுகின்றார். சீதா பிராட்டி பிறவிடத்து 'என் கண்வழி நுழையுமோர் கள்வனே கொலாம்' என்பதும் 'என் உள்ளங்கவர் கள்வன்' என் வேறு பிறரும் கூறியிருப்பதும் இங்கு கவனிக்கற் பாலது. இவ்விருவர் தொழிலும் முடிந்தன. ஒருவருள்ளத்தை ஒருவர் அடைகின்றனர். அங்கோர் போராட்டம் நிகழ்கின்றது. ஒருவருள்ளத்தை மற்றவர் தம்மிடம் ஈர்த்து வைத்துக் கொள்ள முயல்கின்றார். ஒருவருள்ளத்தை மற்றவர் கட்டி யிழுக்கின்றார். அவர்களுக்குக் கயிறேது? அக் கயிறு தான் நோக் கெனும் பாசம். அன்பும், குளிர்ச்சியும், ஆர்வமும் நிறைந்த பார்வை இப் பார்வை கொண்டு ஒருவரை யொருவர் கட்டலாம்.

'பருகிய நோக்கெனும் பாசத்தாற் பிணித்
தொருவரை யொருவர் தம்முள்ள மீர்த்தலால்
வரிசிலை யண்ணலும் வாட்க ணங்கையும்
இருவரு மாறிப்புக் கிதய மெய்தினர்'

ஒருவரழகை யொருவ ரனுபவித்து, பார்வை யென்கிற கயிற்றினுற் கட்டி ஒருவரை மற்றொருவருடைய மனமானது இழுத்தலால் இராமபிரானும் சீதா பிராட்டியுமாகிய இருதிறத்தாரும் மாறிப் புகுந்து ஒருவரிதயத்தை யொருவ ரடைந்தார் என்பதனுல் இந் நோக்கின் வலிமைதா னென்னே யென அறியலாகும்.

இராமனது பார்வை சீதையை அவன் வயப்படுத்தியது. சீதை தன் செயலற்று நின்றாள். அவளுக் குரித்தான அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி யாவற்றையும் இப் பார்வை இராமன் பாற் சேர்த்தது. அவள் மனமும் சௌந்தர்யமும் இப் பார்வையாம் கயிற்றினு லீர்க்கப் பட்டு இராமன் பின்னே சென்றன. என்னே இப் பார்வையின் வன்மை!

சீதாபிராட்டியும் இது கண்டு ஆச்சரிய முற்று,

'பெண்வழி நலனொடும் பிறந்த நாணொடும்
எண்வழி யுணர்வுநா னெங்குங் காண்கிலென்

மண்வழி நடந்தடி வருந்தப் போனவன்
கண்வழி நுழையுமோர் கள்வனே கொலாம்'

எனக் கூறி நிற்கின்றாள்.

சீதா பிராட்டியின் நோக்கிற் கிலக்கான இராமபிரானும் தன் மனம் சீதா பிராட்டியின் பாற் போய் லயித்து விட்டதைக் குறித்து ஆச்சரிய முற்று,

'எருநல்வழி யல்வழி என் மனம்
ஆகுமோ வதற் காகிய காரணம்
பாகுபோன் மொழிப் பைந்தொடி கன்னியே
ஆகும் வேறிதற் கையுற வில்லையே'

எனத் தன் மனம் பிறரால் கொள்ளை கொண்டு போகப் பட்டதைக் குறித்துக் கூறி யாறுத லடைகின்றார்.

எனவே இராமபிரானும் சீதா பிராட்டியும் நோக் கெனும் பாசத்தால் கட்டுண்டு இருவரு மொருவராயினர்.

எனவே குளிர்ந்த தன்மையும், அருள் வழிந்தோடும் பான்மையும், மிக்க அன்பின் நிறைவையும் கொண்ட கண்ணுக்கு பல அரிய செயலாற்றுந் தகைத்து என்பது பெறப்படுகின்றது. உலகத்து ஒருவரை மற்றவர் தம் வயப் படுத்தி தன் மார்க்கத்திலுய்க்க வேண்டின் இந் நோக்கு இன்றி யமையாத தாகும். காந்திஜீ ஒவ்வொருவருடைய உள்ளத்தையும் தம் வயப் படுத்து வது இத்தகைய அன்பு மிகுந்த நோக்காற்றா னென்பது போதரும். அவரது பொக்கை வாய்ச் சிரிப்புடன் இந் நோக்கு கலந்து காண்போர் அடையு மின்பம் என்னே என்னே !

இராமன் சீதைபால் நிகழ்ந்த காதல் நோக்கே போன்ற நோக்கின் தன்மையால் ஒரு தலைமகனும் தலைமகளும் மனங் கட்டுண்டு ஒன்றுபட்டு அவர்கள் ஒருவரை யொருவர் 'மணந்து நடத்தும் இவ் வாழ்க்கை எத்துணை சிறப்பினதாகு மென்பதையும் நாமிங்கு அறிதல் வேண்டும். இவ்விராமாய ணப் படிப்பினை பிற்போக்காளருக்கும் பிடிவாத குணமுடைய பெற்றோர்க் கும் அறிவுச் சுடர் கொளுத்துவதாகும்.

அன்பு செறிந்து குளிர்ச்சி மலிந்து அருள் வழிந்தோடும் நோக்கால் நம் "ஆனந்தன்" நம்மை நோக்குகின்றது. நம்முள்ளத்தை யது தன் வயப் படுத் துகின்றது. எனவே அதன் அருள் நோக்கிற்கு நா மிலக்காதல் மிக மிக அவசியமாம். அதனால் மடையும் பயன் மிகப் பெரிது.






# மாப்பிள்ளை மன்னார்சாமி

(எ. வி. ஜி. ராஜம். பி. எஸ். ஸி.,)

மன்னார்சாமி ஒரு பி. ஏ. பட்டதாரி. டாம்பீகமான ஆள். தலையில் ஹாட், நேவிபுளூ யூனிபாரம், பூட்ஸ், கோல்ட்ரிம் மூக்குக் கண்ணாடி, பாதி வெட்டி விடப்பட்ட ஹிட்லர் மீசை; இவை போதாவா மன்னார்சாமியை ஓர் முதல்வகுப்பு மைனராக்குவதற்கு? அவனுக்கு வயது இருபத்தைந்துக்கு மேலிராது. ஆனால் வேலைமட்டும்தான் கிடைக்கவில்லை. இருந்த பணத்தை யெல்லாம் மன்னார்சாமியின் பெற்றோர் அவன் படிப்பிற்காக செலவழித்து விட்டனர். ஆகவே தற்போது குடித்தனம் சிக்கன சாஸ்திரத்தில் நிபுணத்துவம் வாய்ந்த அவன் அன்னையாலேயே நடத்தப்பட்டது. பி. ஏ. படித்துவிட்டு அட்டண்டர் வேலைக்குக்கூட அப்ளிகேஷன் போட்டான். படித்துவிட்டு உத்தியோகம் அகப்படாததால் வீட்டில் உட்கார்ந்துக் கொண்டு வீட்டு சாமான்களை விற்றுச் சாப்பிட்டுக் கொண்டு, தினந்தோறும் பேப்பர்களில் தேவை என்னும் காலத்தை அதிக கவனமாகப் படித்து விலாசத்தை நோட்புக்கில் குறித்துக்கொண்டு, தினம் தினம் கற்றை கற்றையாய் அப்ளிகேஷன் எழுதித் தபாலில் போட்டுவிட்டு எங்கிருந்தாவது பதினைந்து ரூபாய்ச் சம்பளத்திற்கு நம்மைக் கூப்பிட்டாலும் போதும். டிபாஸிட் தொகை ரூபாய் ஆயிரமானாலும் காலணா வட்டிக்கு கடன்வாங்கி கட்டிப் போகலாம் என்று எண்ணினான். யாராவது "இப்படி சும்மா இருக்கலாமா" என்று கேட்டால், "ஐதராபாத்தில் ஐந்நூறு ரூபாய் சம்பளத்துக்கு ஆர்டர் வந்திருக்கிறது. கல்கத்தாவில் கம்பெனி வைக்கப் போகிறேன்" என்று வீணே வாய்ப்பந்தல் போட்டுக் கொண்டிருப்பான். நிற்க, அவன் பிதா கேட்போரிடம் "என் பிள்ளை சத்தியத்தில் அரிச்சந்திரன், அழகில் மன்மதன், படிப்பில் ஸரஸ்வதிக்கு பாடம் கற்றுக் கொடுப்பான், சர்வ கலாசாலையில் பட்டம் பெற்றவன். ஆனால் வேலை ஒன்றும் கிடைக்கவில்லை. இக்காலத்து பாழும் படிப்பு கவைக்கு உதவாத படிப்புதான்! பட்டதாரிகள் பட்டாளங்கள் சர்வ கலாசாலைகளிலிருந்து வெளிவர வெளிவர வேலையில்லாத் திண்டாட்டம் பெருகிக் கொண்டேதான் இருக்கும். பாருங்கள் ஒரு பி. ஏ. க்கு ரயில்வே கிளார்க் உத்தியோகம் கிடைத்தாலும், ஆரம்ப சம்பளம் முப்பது ரூபாய்தான். முப்பது ரூபாய் பெற அவன் நன்றாய் அலங்காரம் செய்துக் கொள்ளவேண்டும். அலங்காரம் செய்துக் கொள்வதற்கு கோட்டு, யூனிபாரம், பூட்ஸ், ஹாட் முதலியவைகளில் ஒவ்வொன்றிலும் வருஷத்துக்கு பத்து ஜதையாவதுவேண்டும். இந்தமாதிரி பணத்தை வாரி இறைத்து உடுப்புக்களை அணிந்துக்கொண்டு மாதம் முப்பது ரூபாய் சம்பாதிக்க வேண்டும். அதில் ஆபீஸில் போடும் அபராதம் வேறு, அடிக்கடி க்ஷவரம் வேறு, காப்பிச்சிலவு வேறு, வண்டிச்சிலவு வேறு! 'உத்தியோகம் புருஷ

லட்சணம்' என்றபடி பேர்வழியும் ஆடம்பரமாக கையாட்டி குடை பிடித்துக்கொண்டு, 'எங்கள் வீட்டுக்காரரும் கச்சேரிக்கு போகிறார்' என்று சொல்லிக் கொள்வதற்குத்தான் இக்காலத்து உத்தியோகமும், பட்டமும் உதவும். ''நிதியும் கணவனும் விதியின் பயனே'' என்றதுபோல் அவரவர்கள் பூர்வத்தில் செய்த வினைப்பயன்படியே நடக்கும்'' என்பதோடு தன் பிரசங்கத்துக்கு முற்றுப்புள்ளி வைப்பார்.

மன்னார்சாமியின் பட்டத்திற்கும், அழகிற்கும் ஆசைப்பட்டு கோயமுத்தூர் ஜில்லாவில் உள்ள ஒரு பணக்காரர் தன் மகளைக் கொடுக்கச் சம்மதித்தார். அடி மேளத்தை, பிடி தாம்பூலத்தை, கட்டு தாலியை என்ற கதையாய் அவசரகோலம் அள்ளித் தெளித்ததுபோல் கலியாணம் முடிந்தது. மன்னார்சாமியின் மாமனார் ஓர் கொழுத்த பணக்காரர். அநேக கரும்புத் தோட்டங்களும், கரும்பு ஆலைகளும் அவருக்கு உண்டு. கரும்பிலிருந்து எடுக்கும் பாலைக் காய்ச்சி பாகாய் எடுத்து வீட்டில் உரியின்மேல் பானையில் வைத்திருப்பார். அது தேவாமிர்தம் போலிருக்கும். தோசைக்கு ஊற்றிக் கொண்டு வைகுண்ட ஏகாதசிக்கு பலகாரம் சாப்பிட்டால் 'தினமும் வைகுண்ட ஏகாதசியாக இருக்கக் கூடாதா?' என்று தோன்றும். நமது மாப்பிள்ளை—தப்பர்த்தம் செய்து கொள்ள வேண்டாம்; எனக்கு பெண்ணே இல்லை—இந்தப் பாகிடம் அதிக மோகங் கொண்டிருந்தான். தீபாவளிக்கு தன் மாமனார் ஊர் போனால் தன்னுடைய பாகு ஆசையைப் பூர்த்திசெய்துக் கொள்ளலாமென்பது அவனுடைய எண்ணம். தலைத் தீபாவளியை எதிர்பார்த்து அவன் பஞ்சாங்கங்களை யெல்லாம் புரட்டிப் பார்த்தான். பிறகு மாமனார் ஊர் அடைந்தான். அங்கு மாப்பிள்ளை சிறிது லஜ்ஜை பிகுவாகவே இருந்தான். தீபாவளிக்கு மறுநாள் அமாவாசை. மருமகப்பிள்ளைக்கு மாமியார் தோசை, இட்லி முதலிய பலகாரங்களை பரிமாறினாள். இரவில் மாப்பிள்ளைக்கு இட்லி, தோசை இவற்றின்மேல் பாகு பொழியப்பட்டது. கொஞ்சம் விழுவதற்குள் மாப்பிள்ளைக்கு வெட்கம் வந்துவிட்டது. ''போதும், போதும்'' என்று கையை அசைத்தான் மன்னார்சாமி. மாமியார்என்ன பண்ணுவாள்? வடதேசத்தில் உள்ளவர்களுக்கு மிளகாய்ப் பொடிதான் அதிகப் பிரீதியென்று கேள்விப் பட்டிருந்தாள். ஒரு கரண்டிக்கு எட்டு கரண்டியாக மிளகாய்ப் பொடியைப் போட்டு நல்லெண்ணெயை விட்டுவிட்டுப் போய் விட்டாள்.

மாப்பிள்ளைக்கு நாக்கு எரிச்சலோடு வயிற்றெரிச்சலும் சேர்ந்து கொண்டது. பாகுக்காக தீட்டி வைக்கப்பட்டிருந்த நாக்கில் மிளகாய்ப்பொடி படுவதென்றால்? வலியவந்த ஸ்ரீதேவியைக் காலாலுதைப்பது போல பாகை உதறிவிட்ட அவனுக்குப் பாகு இனி வராது என்று நிச்சயமாகிவிட்டது. ஒரே ஏக்கமாக ஏங்கிக் கிடந்தான். அந்தப் பாகின் மேலுள்ள மோகம் திருடியாவது சாப்பிடலாம் என்ற வரைக்கும் அவனைக் கொண்டுவந்து விட்டு விட்டது. பலகாரம் ஆன பின் பாகு எங்கே இருக்குமென்று ஆராய்ந்தான். பக்கத்திலிருந்த ஓர் அறையில் கழுத்தில் சுருக்கிட்டுப் பாகுப் பானையைக் கட்டியிருந்ததை யறிந்தான். படுத்துக் கொண்டால் தூக்கம் வருகிறதா? பாகு அவனை நெஞ்சைப் பிடித்துக் குலுக்குகிற குலுக்கு அவனுக்கல்லவா தெரியும்? சந்தடி யெல்லா மடங்கியதும் மெதுவாக பாகு இருந்த அறைக்குள் நுழைந்தான். பானை உயரக் கட்டி யிருப்பதைக் கண்டு

எடுக்க வழி தெரியாமல் திகைப் புற்ருன். இத் தக்க சமயத்தில் அவன் பார்த்த கிருஷ்ண லீலா ஸினிமா காட்சி அவனுக்கு ஞாபகத்துக்கு வந்தது. அங்கு கிருஷ்ணனின் தோழன் ஒருவன் இடைச்சி வீட்டில் உரியில் உள்ள பானையைப் பொத்து தயிர் பருகுவதைப் போல் தானும் செய்யத் துணிந் தான். உடனே அங்கே சார்த்தி யிருந்த மெல்லிய மூங்கில் கம்பை எடுத்துக் கொண்டு சட்டிக்கு நேரே அடியில் நின்றபடி அந்தக் கம்பால் பானையை ஒரு குத்துக் குத்தி விட்டு ஆவென்று வாயைத் திறந்து கொண்டு நின்ருன். 'டொப்' என்ற சத்தத்துடன் பானையின் அடியில் ஒரு புதிய துவாரம் திறந் தது. அதன் வழியாக வந்த தேவாமிர்த தாரையை நெடு நாளாக இருந்த தாகத்தை தீர்த்துக் கொள்ளப் பருகினன். வாயில் விழுந்துக் கொண்டே யிருந்தால் விழுங்க வேண்டாமா? தலையை நிமிர்ந்து விழுங்கும்பொழுது பாகுத்தாரை தடங்கலின்றி அபிஷேகம் செய்து கொண்டிருந்தது. வயிறு நிரம்பக் குடித்தான். உடம்பு முழுதும் பாகு அபிஷேக மாயிற்று. அப் புறம் உலக ஞாபகம் வந்தது. உடம்பெல்லாம் ஒரு முறை தடவிப் பார்த் தான். தலை மயிர் ஒரே சடையாக இருந்தது. வேஷ்டிகள் விக்கிரகத்தின் மேலுள்ள துணியைப் போல், பாகில் நனைந்து பசைத் துணியா யிருந்தன. இப்பொழுது தான் மாப்பிள்ளைக்கு தன் மட்டித் தனம் விளங்கியது. மாப் பிள்ளையின் மாமனர் மெத்தை தைப்பதற்கு பஞ்சு எடுத்து நன்ருகக் கடைந்து கூடத்தில் கொட்டி வைத்திருந்தார். அறையிலிருந்து வெளியே வந்த மாப்பிள்ளை வாயிற்படி தடுக்கி தொப்பென்று பஞ்சின் மேல் விழுந் தான். பஞ்சு ஆளை அப்படியே மூடிக் கொண்டது. மேலெல்லாம் பஞ்சு திரளை திரளையாக ஒட்டிக் கொண்டது. எழுந்து நின்றபொழுது அவனுக்கு அவனையே நம்ப முடியவில்லை. "சரி, இனி இங்கே இருக்கக் கூடாது. இராத்திரி எங்கேயாவது இருந்து விட்டு விடியற் காலையில் ஏரியில் குளித்து விட்டு நல்ல பிள்ளையாக வீட்டுக்குத் திரும்பலாம்" என்று நினைத்துப் புறப்பட்டான். கொஞ்ச தூரம் சென்றதும் ஊர் காவலுக்காக இரண்டு போலீஸ்காரர்கள் தெருவில் வருவதைக் கண்டான். "நம்மைக் கண்டு விட்டால் என்ன செய்வது?" என்ற எண்ணம் அவனுடைய நெஞ்சில் போராடிற்று. எதிரில் வந்த போலீஸ்காரர்கள் இவனைக் கண்டதும் பூதமோ, பேயோ என்று எண்ணி குடல் நடுக்கம் கொண்டு 'ஐயா! கட வுளே! நாராயணு!' என்று கூச்சல் போட்டுக் கொண்டு மூலைக் கொருவராக ஓடினர்கள். அவனுடைய அதிருஷ்ட வசமாக கொஞ்ச தூரத்தில் ஓர் ஆட்டுப் பட்டி இருந்தது. காவற்கார இடையன் குறட்டை விட்டுத் தூங் கினன். "இதுதான் நமக்கேற்ற இடம். இராத்திரி வேளையில் ஆடோடு ஆடாக அடங்கி இருந்து விட்டுக் காலையில் ஏரியில் குளிக்கலாம்" என் றெண்ணி ஆடுகளுக்கு இடையில் மெதுவாகச் சென்று கையையும், காலையும் கீழே வைத்துக் கொண்டு முடங்கிக் கிடந்தான்.

அமாவாசை இருட்டில் ஆடு திருடுவது சுலபமாகையால் இரண்டு திரு டர்கள் இடையன் வாயில் துணியை யடைத்து மரத்தோடு கட்டிவிட்டு ஆடு களிடம் வந்தார்கள். "அடே தம்பி! நல்ல கொழுத்த ஆடாகப் பாரு; சப்பை கொழுத்த ஆடு ஒன்ருனாலும் போதும்" என்ருன் ஒருவன். ஆடு களுக்கு இடையே பஞ்சு மூடிய மன்னர்சாமியின் உடம்பு அமாவாசை இருட் டில் ஆடாகவே தோன்றியது. அவனை விடக் கொழுத்த ஆடு அங்கே ஏது?

திருடிக் கொண்டு ஓடும் வேகத்தில் ஆனென்றும், ஆடென்றும் கூட திருடர்கள் கவனிக்கவில்லை. முன் புறமும் பின் புறமுமாக மாப்பிள்ளையைத் தூக்கிக் கொண்டு ஓடினார்கள். "பாகை எண்டா குடித்தோம்?" என்று எண்ணினான் மாப்பிள்ளை. திருடர்கள் கொஞ்ச தூரம் போவதற்குள் தாங்கள் தூக்கிக் கொண்டு வருவது ஆடோ அல்லவோ என்ற சந்தேகம் உண்டாயிற்று. "அண்ணே, இது என்ன ஆடு மாதிரி இல்லையே! ஒரு பூதம் போலக் கனக்குதே. இதை நம்மால் தூக்க முடியாது" என்றான். திருடர்கள் பொத்தென்று கீழே போட்டார்கள். இவ்வளவு நாழிகையாக முடங்கிக் கிடந்ததனால் உண்டான வலியைத் தீர்த்துக் கொள்ள தக்க சமயம் பார்த்துக் கொண்டிருந்த நமது மாப்பிள்ளை பூமி தேவியின் ஸ்பரிசம் பட்டவுடன் எழுந்து உட்கார்ந்து, அடே யப்பா! என்று கையையும், காலையும் நீட்டினான். மூத்த திருடன் "அடே! கருப்பண்ண சாமிடா!" என்றான். உடனே திருடர்கள் மாப்பிள்ளையின் காலில் விழுந்து, வாய் குளறினபடி "ஐயோ! எங்களை விட்டு விடு; நாங்கள் ஏழை. பிள்ளைகுட்டிக் காரர்கள். வாரம் வாரம் இரட்டை கிடா வெட்டி உங்கள் கோயிலில் பூசை போடுகிறோம்! சாராயம் வைக்கிறோம்! வெள்ளி சுக்குமாந்தடி செய்து வைக்கிறோம்! பட்டு சாத்துகிறோம்! பெண்டாட்டி பிள்ளையோடு காலில் விழுகிறோம்! திருட வரும்பொழுது உனது கோயிலில் காணிக்கை போடாததற்காக மன்னித்துக் கொள்!" என்று சொல்லிவிட்டு ஓடினார்கள்.

கொஞ்ச நாழிகைக்குள் சூரியன் தோன்றி விட்டான். மாப்பிள்ளை ஏரியில் ஸ்நானம் செய்து விட்டு நல்ல பிள்ளை போல் மாமனார் வீடடைந்தான். திருடர்கள் ஓடின ஓட்டத்தை நினைத்த மாப்பிள்ளை இரவு முழுதும் தான் செய்த அசட்டுச் செயல்களுக்கு நடுவிலே நேர்ந்த இந்த ஓர் வீரச் செயலால் உள்ளம் பூரித்தான். நீங்களும் மாப்பிள்ளை மன்னார்சாமியைப் போன்ற மருமகனைப் பகீரதப் பிரயத்தனமாவது செய்து அடையுங்கள். ஆனால் மாப்பிள்ளை மன்னார்சாமியை ஏகாதசிக்கு அழைக்கத் தவற வேண்டாம்.



# காரி கிழாரின் கவித்திறம்

(K. V. சிவசுப்பிரமணியன், B. A.)

கதிரவன் கால் கொண்டெழுந்து குணதிசைச் சிகரம் வந்தடைந்தான். காசினி முழுவதும் கவினுறு ஒளி பரவியது. ஞாலமெங்கும் விளங்கிய நீலவிருள் ஒழிந்தது. பொருள் வயிற் பிரிந்த தலைவன் வரவைக் கண்டு உவகை பூக்கும் தையலார் முகம் போல பொய்கைகளிலே புதிய தாமரை மலர்கள் பூத்தன. மாந்த ரனைவரும் தத்தம் தொழின் முறைக்கு ஆவன புரிவாராயினர்.

வையை என்ற பொய்யாக் குலக் கொடியால் வளம் பெற்ற மதுரைமா நகரில் கோலோச்சிக் குடிபுறங்காத்து வந்த பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமி பெருவழுதியின் அரண்மனையில் அறிவரும் அமைச்சரும், முனிவரும் புலவரும் கூடி நூலாராய்ச்சியிற் புகுந்தனர். பாண்டிய மன்னனும் உரிய காலத்தில் வேத்தவையை அடைந்தனன். அஞ்ஞான்று அவண் குழுமியிருந்த அருஞ் சொற்கலைஞர் பலரும் சொற் போரிட்டனர். செழியர் பெருமானும் செந்தமிழ்ப் புலவரின் செஞ்சொ லமுதுக்குச் செவி சாய்ப்பானாயினன். வெற்றி பெற்றோர்க்கு வேண வெலாம் தருவா னாயினன்.

இங்ஙனம் இம் மன்னன் புலவர்க்குப் புரவலனாக இருப்பதைக் கேள்வியுற்ற காரி கிழார் என்னும் புலவர் அவனைக் காணச் சென்றார்; அப் புலவர் பெரியார் தாளாண்மையின் மிக்க வேளாண் குலத்தினர்; அல்லன நீக்கி நல்லன நவிலும் நாவன்மை படைத்தவர்; செந்திரு வந்துற்றாலும் வெந்துயர் வந்துற்றாலும் ஒத்திருக்கும் உளத்தினர்; நாடெங்கும் சென்று நல்லோர் பலரின் நட்பினைப் பெற்று நற்குணங்கட் கெல்லாம் உறைவிடமாய்த் திகழ்ந்தவர்; தமிழணங்கின் தளையை நீக்கத் தாழா துஞற்றுபவர்.

புலவர் பெருந் தகையாகிய காரி கிழாரது வருகையைச் செவி யுற்ற செழியர் கோமகன், அவரை உரிய முறையி லழைத்து வரச் செய்து வணங்கி இருக்கை நல்கினன். பிற புலவர்களும் அவரை அக மகிழ்ச்சியோடு வரவேற்றனர். பாண்டியன் அவரை நோக்கி, "பெரும! எம் போன்றாரை இடித் துரைக்கும் பெற்றி வாய்ந்த நும் போன்ற புலவர் குழாத்தினர் வரவு நல்வரவாகுக. தாங்கள் எளியேனது அவைக்கு எழுந்தருளியதன் நோக்கமென்ன? முன்னிய காரியத்தை முட்டின்றி முடிக்கக் காத்திருக்கிறேன்" என்றான். காரி கிழார் எழுந்து நின்று "பொதியப் பொருப்பின் புகழொடு பொருந்திய புண்ணியர் குடியிற் பூத்த புரவல! இரவலராகிய எம் போன்றார்க்குப் புரவலன் எனவும், தமிழணங்கின் சங்கத்தை யமைத்தோர் வழித் தோன்றல் எனவும் கேள்வி யுற்று நேரிற் கண்டு களிக்கலா மென வந்தனன். தமிழ்ப் பெருங் குடியில் பிறந்த பெருமை எம தாகும்; அத் தகையினர் பலரை ஆதரித்தவர் வழியிற் றோன்றிய பெருமை நினதாம். நாட்டின் நலத்தின்

பொருட்டு நின் செங்கோல் செழிப்பதாக" எனக் கூறி" வடாஅது பனிபடும் நெடுவரை" என்ற வாழ்த்துரைச் செய்யுளைக் கூறுவாராயினர்.

அது போழ்து அங்கிருந்த புலவர் பெருமக்கள் அச் செய்யுள் நடையினைக் கூர்ந்து நோக்குவாராயினர். அதைச் செவி மடுத்த அரசன் எழுந்து "புலவர் பெருந் தகையே! சிறிய இனிய சொற்களில் அருங் கருத்துகள் பலவற்றை அமைக்கும் ஆற்றல் வாய்ந்த புலவீர்! எம்முடைய சிற்றறிவில் நுமது செய்யுள் நயம் தெள்ளிதின் விளங்காமையின் உமது செய்யுளுக்கு உமது வாயினின்றே பொருளை எதிர் பார்க்கிறேன்" எனக் கூறி அமர்ந்தான். கற்பகக் கவிஞராம் காரி கிழார், காவலன் கழறிய மொழிகளைச் சிரமேற்றாங்கி எழுந்து நின்று பின் வருமாறு சொன் மாரி பொழிந்தார்:—

"வய வேந்தே! யான் இச் செய்யுளில் நினது குடிப் பெருமையையும் நினது புகழையும் தெள்ளிதின் விளக்கியுள்ளேன். நினது அளவிலாப் புகழும் துகளிலாக் கீர்த்தியும் வடதிசையின் பனிமலைக் கப்பாலும் தெற்கில் குமரிக் கப்பாலும் மேற்கில் மேலாழிக் கப்பாலும் கிழக்கில் சகரர் தொட்ட சாகரத்திற் கப்பாலும், பாதாள லோகத்தின் கீழும், மேலே கோ லோகத்தின் மேலும் பரந்துளது என முதல் எட்டடிகளில் கூறினேன். அது எங்ஙனமெனில் விளக்குதும். ஒரு மொழி வைத்துலகாளும் உத்தமப் பெரு வழுதியாகலின் உனது புகழ் நம் நாட்டினுள் அடங்காது அயல் நாடுகளிலும் பரவுதல் முறையே. வேள்விகள் செய்து விண்ணவரை மகிழ்வித்ததால் விண்ணுலகங்களிற் பரவியுளதெனவும், ஆழிக்கு அப்பால் அமைந்துள்ள அயல் நாடுகளுக்கு தமிழ் நாட்டு மரக் கலங்கள் சென்று வாணிபம் புரிதலின் கடற்கப்பாற் பரவிய தெனவும், வட வெல்லையாம் பனிமலையில் கயற் பொறி பொறித்து வடதிசை மன்னரை நடுங்கச் செய்தாயாகலின் இமயமலைக்கு வடபாலும் நினது புகழ் பரவியுள்ளதெனக் கூறினேன். இனி, நீ கோடற் குரிய நன்னெறி இன்னதென பின்வரும் அடிகளில் கூறினேன். விவகாரங்களில் நியாயங் கூறுங்கால் துலைக் கோலின் முள்ளைப் போலும் கூற்றுவனைப் போலும் நிற்பது நினது கடமையாம். அங்ஙனம் ஒழுகு வாயாயின் படை குடி கூழ் அமைச்சு நட்பு அரண் என்ற ஆறும் வளரும் அரிய அரண்கள் அகழிகள் பலவற்றை அடக்கிக் கொண்டு அவற்றிலுள்ள அளவிறந்த பொருள்களை வறியோர்க்கு வழங்குக. நினது வெண்குடை வேறெங்கும் வணங்குதலிலதாய் ஓங்கிப் புகழ் பெறுமாயினும் முக் காலமு முணர்ந்த முனி புங்கவரையும், நுதல் விழி நாட்டத் திறையோன் கோவிலையும் வலம் வருங்கால் பணிக. ஒருவருக்கும் வணங்காத நினது முடி ஒன்று புரி கொள்கை முத்தீப்பேணும் இரு பிறப்பாளராம் அந்தணர் ஆசி கூறுங்கால் வணங்குக. "எல்லார்க்கும் நன்றாம் பணிதல் அவருள்ளும், செல்வர்க்கே செல்வம் தகைத்து" என்பது பொய்யா மொழியன்றோ? நினது மாலை வாடாத் தன்மைத் தாகிலும் எதிரியின் நாடுகளை எரித்த புகையில் வாடுக. வேற்றரசன் முன் அங்காத வெகுளியுடையா யாயினும் நினது சினம் பெண்டிரின் புலவிமுன் மாறுக. இங்ஙனம் அகம் புறம் எனும் இரு துறைகளிலும் வெற்றி பெறுக. பல திறப்பட்ட வெற்றியை யுடைய வள்ளன்மையிற் சிறந்த பாண்டிய மன்ன! உலகம் உள்ள நாளளவும் உதிக்கும் ஆதித்தன் போலவும், தாரகை நடுவண் மேவும் தனி முழு மதியம் போலவும் வாழ்வாயாக என்று வாழ்த்துக் கூறினேம். நெடு முடிச் செழிய! இங்ஙனம் 'அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நாற்

# பரவையின் விரகதாபம்

—:(o):—

(வெ. கணேசன்.)

மாலை நேரம். ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் தொழில்களி னின்றும் தத்த மில்லங்களுக்கு வரும் நேரம். புள்ளினங் கள் யாவும் தங்கள் இளங் குழவிக ளிடத்திலுள்ள அன்பு வலிந் தெழத் தம் கூடுகளை யடைந்து மகிழ் வெய்தும் நேரம். கதிரவன் தம் வேலை முடிந்தது இனி ஓய்வெடுத்துக் கொள்ளலாம் என்பது போன்று மறையும் நேரம். மலர் கள், மறலி மாண்டான் என நகுவன போன்று அலரும் நேரம். காமுகர்கள் யாவரும் அலறி விழுந்தான், அலவன் எழுவான்; நம் காதலிகளுடன் இன் னுரை யாடி இன்புறலா மென்று மகிழ் வெய்தும் நேரம். இந் நீணிலத்தின் நிலையாமையை நன்குணர்ந்த நீர்மையாளர்கள் காளென வொன்று போற் காட்டி உயிரீரும் விண்மணி மறைந்தான்; நம் வாழ் நாளில் ஒன்று வீணே பயனின்றிக் கழிந்ததே என்று ஏக்கமுறும் நேரம். வெளி நாடு சென்றிருக் கும் தங்கள் காதலர்களைக் குறித்துக் கன்னியர்கள் கவலை கொள்ளும் நேரம்

அச் சமயம் திருவாரூர்ப் பெரு நகரில் எழுந்தருளி யிருக்கும் புற்றிடங் கொண்டாராகிய எம் பெருமானினது ஆலயத்தில் மணி யோசை விண்ணைத் துளைக்கின்றது. கோட்டம் பலவித விளக்குகளால் நன்கு அலங்கரிக்கப் பட்டிருக்கின்றது. ஜனத்திரள் கண் கொள்ளாக் காட்சியாகப் பொலிகின் றது. சாம்பிராணி, கற்பூரம், அகில், சந்தனம், முதலியவை கொளுத்தும் நறு மணம் மனதிற்கு ஓர் புத்துணர்ச்சியை யளிக்கின்றது. அக் கூட்டத் தினரில் சிலர் தேவாரம் பாடுவாரும், சிலர் திருவாசகம் செப்புவாரும், சிலர் அஞ்செழுத் தோதுவாருமாக பக்திரசத்தில் ஈடுபட்டு இகத்தை மறந்து,பரத்தி லேயே நினைவு பூண்டு நிற்கின்றனர். அவ்வமயம் புற்றிடங் கொண்ட பர மனுர்க்கு தீப ஆராதனை நடக்கும் சமயம். எல்லோரும் கோயிலின் முன்

---

பொருள்களையும் விளக்கும் இச் செய்யுளையும் நின் புகழோடு பொருத்தி மார்பி லணிந்து எமை ஆதரிக்க வேண்டுகின்றேன்.

காரி கிழாரது சொற் பொழிவைச் செவிவாயாக நெஞ்சுகளனாக பருகிய புரவலனும் புலவர்களும் ஆனந்த மேலீட்டால் அக மகிழ்ந்து மௌனமா யிருந்தனர். பின்னர் அரசன் எழுந்து "புலவீர்! இன்றே தமிழ்த் தெய்வத் தின் தனிப் பெருந்திருநாள். நும் செய்யுளுக்கு யானியற்றும் கைம்மாறு யாதுளது? நுமது அருளுரையை அறவுரையாகக் கொண்டு யான் வாழக் கருதி யுள்ளேன்" எனக் கூறி ஆயிரம் பொற் காசுகளையும் அழகிய தோர் பூந்துகிலை யும் பரிசிலாக அளித்தான். பின்பு அரசன் புலவர் கூட்டத்தை நீத்து அரசி யல் மண்டபத்தை யடைந்தான். அன்று முதல் காரி கிழார் பாண்டி நாட் டுப் புலவராக வாழ்ந்து வந்தார்.

சிரமேற் குவித்த கையராய், ஹரா, ஹரா, சிவ, சிவ என்னும் பிறவிப் பிணி நீக்கும் உயர் மந்திரங்களைத் தங்களது மனமார வோதி இன்ப வாரிதியில் விழுந்து திளைத்து நிற்கின்றனர்.

அக் கூட்டத்தினருள், பன்னீ ராட்டைப் பிராயத்தினளாய இள மங்கை யொருத்தி, திருவாரூரனை மனமார வணங்கி, ஏதோ விண்ணப்பித்துக் கொள்வது போன்று தோன்றுகின்றது. அவளை நோக்கின் அரவிந்த மலருள் நீங்கி யடியினைப் படியத் தோய திரு இங்கு வந்ததே போன்றிருக்கின்றாள். அவளைச் சூழ ஆய வெள்ளங்கள் நிறைந்து நிற்கின்றன. அவளது தந்தம் போன்ற வுடம்பில் நீலப் பட்டாடை யொன்று அழகுக் கழகு செய்தது போற் பொலிகின்றது. உச்சி முதல் உள்ளங் கால் வரை விலை யுயர்ந்த நவமணி யாபரணங்கள் அணிந்து கொண்டிருக்கின்றாள். அவளது மதி போன்ற நுதலில் மறுப்போன்று சாந்து திகழ்கின்றது. அவ்விள மங்கை கண்களிரண்டையும் நன்கு அடைத்து கூப்பிய கையளாய் கடவுளை வேண்டல் பார்ப்பதற்கு மிகவும் உருக்கமா யிருக்கின்றது. அவள் வேண்டுவது யாதென்பது யாவரறிவர்? அவள் பொன்னையோ பொருளையோ வேண்டவில்லை யென்பது திண்ணம். அவளது முகம் கவலை யென்னும் நோயால் பீடிக்கப்பட்டது போன்று காணப் படுகின்றது. ஐயோ! பாவம்! இவ்விளம் வயதில் அவளை வருத்தும் கவலைதான் யாதோ யாரறிவார்? அவள், கண்களை யடைத்திருப்பினும், சிறிது நேரத்திற் கொரு முறை கண்களைத் திறந்து தன்னெதிரில் நன்கு ஆடையாபரணங்களால் அலங்கரித்துக் கொண்டு அடியார்கள் புடை சூழ நிற்கும் அரனன்ப னொருவனைக் கனிந்த பார்வையுடன் நோக்குகின்றாள். பெரு மூச்சு விடுகின்றாள். பின், பழமை போல் கண்களை யடைத்துத் தவம் புரிகின்றாள். தீப ஆராதனை முடிந்து யாவரும் பிரசாதம் முதலியவை பெற்று வீடு திரும்பத் தொடங்கினர். நமது நங்கையும் மற்றவர்களுடன் தன்னில்ல மடைந்தனள்.

* * * *

இரவு நேரம். ஆகாயம் மாசு, மறுவின்றி வெகு ரமணீயமாக விளங்குகின்றது. அப்பொழுது,

"கலந்தவர்க் கினியதோர் கள்ளுமாய்ப் பிரிந்
துலர்ந்தவர்க் குயிர்சுடு விடமுமா யுடன்
புலர்ந்தவர்க் குதவிசெய் புதிய தூதுமாய்
மலர்ந்தது கெடுகிலா மதனன் வேண்டவே,"

என்று கம்பர் கூறியுள்ளது போல் தண்சுடர் விண்ணிற் றோன்றியது.

* * * *

வானளாவி உயர்ந்து நிற்கும் பெரியதோர் மாளிகை; அதன் உப்பரிகையில் பசும் பொன்னாற் செய்யப்பட்ட தங்கக் கட்டில் ஒன்று இடப்பட்டிருக்கின்றது. அதில் அன்ன இறகாலும், நன்கு ஆய்ந்தெடுத்த இலவம் பஞ்சினாலும், விலை யுயர்ந்த பட்டினாலு மாக்கப்பட்ட மெத்தை. அதின் மேல் காம்பு முறித்து இதழ்கள் மாத்திரம், வெகு அக்கரையுடன் பொறுக்கப்பட்டு, பன்னீரும் மற்று வாசனைத் திரவியங்களு மிடப்பட்ட இள மலரமளி. அதின்

மீது மூன்றாம் பிறைச் சந்திரனைப் போன்ற நுதலையும், முழு மதியை வெட்கச் செய்யும் ஒளி மிக்க முகத்தையும், கரு முகில் போன்ற அளக பாரத்தையும், குவளை போன்ற கண்களையும், எட்பூ போன்ற நாசியையும், பவளம் போன்ற விதழையும், முத்தன்ன பற்களையும், விழைவு விடுத்த விழுமியோரும் விழைவு கொள்ளும் பன்னீராட்டைப் பிராயத்தினளாய இளமங்கையொருத்தி, மனதிலே கவலை கொண்டவளாய் அம் மல ரமளியில் அப்புறமுமிப்புறமும் புரண்டு கொண்டிருக்கின்றனள். ஒருவருடனும் பேசுகின்றாளில்லை. அடிக்கடிப் பெரு மூச்சு விடுகின்றாள். கண்களில் நீர் அருவி போன்று ஓடி கண்ணாடியன்ன கன்னங்களை நனைக்கின்றன. இவளது ஆற்றாமைக் காற்றாத அருகிருந்த தோழி பின் வருமாறு கூறத் தொடங்கினாள்.

"அம்மா! என் கண்ணே! கண்ணுட் கருமணியே! "பாவை"! உன் மனதை வாட்டும் துயரம் யாது? எதற்காக இப்படிப் புரளுகின்றாய்? மணியோ பத்தடித்து விட்டதே. நண்பகல் 12 மணிக்குச் சிறிது ஊண் கொண்ட மகளல்லவா நீ! இப்படிப் பட்டினி கிடந்தால் தேகத்திற்குப் பிடிக்குமா? இனியும் பன்னிரண்டு ஆண்டுகள் நிரம்பப் பெறாத மணிப்பாவையாகிய நீ நூறாண்டு சென்ற கிழவிகள் போலும் அடையாத துயரம் அடைந்தது போன்று வருத்த முறுகின்றனையே! அதன் காரணம் யாது? நீ இவ்விதம் துயரடைந்து நான் பார்த்ததில்லையே! உனக்கென்ன வேண்டுமென்று கூறு, உடன் என்னுயிரை யதற்கு விலையாக ஈந்தேனும் கொணர்ந்து தருகின்றேன். அச்சமில்லாது சொல். மேலும், நீ இன்று மாலை கோயிலுக்குப் போமளவும் மிகவும் சந்தோஷமாக எல்லோருடனும் இனிது உரையாடியிருந்தனையே. இப்பொழுது ஏன் இவ்விதம் வருத்த முறுகின்றாய். நீ வருத்த முறுவதைப் பார்க்க எங்கள் மனம் சகிக்குமா? கோயிலினின்று வெளி வந்தது முதல், உன் மனம் ஏதோ மாறி யிருக்கின்றது போற்றோன்றுகின்றது. உனக்கு கண்ணேறு கழிக்கட்டுமா; அல்லது வெறியாட் டயர்விக்கட்டுமா? நீ இன்று, புதிதாகச் செய்து வந்துள்ள, வைரக் கழுத்தணியையும், நீலப் பட்டாடையையும் அணிந்து கொண்டு சென்றதைப் பார்த்து யாராவது கண் பட்டிருப்பார்கள். அழகில் பேர் பெற்ற ஊர்வசி, திலோத்தமை, மேனகை முதலிய அரம்பை மாதர்களும், உன்னிடத்தில் பிச்சை யெடுக்க வேண்டும். அவ்வளவுக் கழகா யிருந்தாய். இன்று வியாழக் கிழமை, கண்ணேறு கழிக்க நல்ல நாளேயாகும்," என்று கூறித் தன்னருகிலிருந்த வேறொரு தோழி யிடத்தில் அதற்கு வேண்டிய பொருள்கள் யாவும் கொணரச் சட்டஞ் செய்து, பின்னும் பாவையைப் பார்த்து, "பாவை! கண்ணே! உன்னை வாட்டும் துயரம் யாது? என்னிடத்தில் கூறு. நான் ஒருவரிடமும் கூற மாட்டேன். அதற்கு என்னால் பரிகார மியலுமேல் தடை யின்றிச் செய்வேன். என்னிடத்தில் அச்சமின்றிக் கூறு" என்று வற்புறுத்தினாள்.

அதைக் கேட்ட பாவை, "தோழி! என்னருமைத் தோழி! எனக்குக் கண்ணேறு படவுமில்லை; அன்றி வேறு தெய்வங்களின் உபத்திரவமுமில்லை. என் மனதில் வேறொரு விஷய மிருந்து துன்புறுத்துகின்றது. அதை யெப்படி நான் வெளி விட்டுக் கூறுவேன். கூறின் என்னை எல்லோரும் ஏளனம் செய்ய மாட்டாரோ. எனினும், இவர்கள் ஏளனத்தா லொன்

றும் என் மனம் மாறுபடாது. நீ எனது உயிருக்குயிரான தோழி யாகை யினுல் உன்னிடத்திற் கூறுகின்றேன். என் அருகில் வா,'' என்று பக்கத் தமர்த்திக் கொண்டு அவளது (தோழியின்) கையைப் பிடித்துக் கொண்டு, "தோழி! இன்று நாம் புற்றிடங் கொண்டாரை தரிசிக்கப் போனபொழுது கோயிலின் முன்பாக அடியார்கள் புடை சூழ கட்டிவங் காளைப் பருவத்தின னுய அரங்கன் போன்ற வழகுடைய அடியா ரொருவர் வந்தனரே. அவரை நீ பார்த்தாயன்றோ? அம் மகானைப் பார்த்த மாத்திரத்தில் என் மனம் அவர் பாற் சென்று பற்றி விட்டது. பின் என்ன முயன்றும் அதைத் திரும்ப வெடுக்க முயலவில்லை. இப்பொழுது என் உயிர் என் வசமில்லை. அவர் வசமே யிருக்கின்றது. என் உயிரை யுண்டது அவரது,

"இந்திர நீலமொத் திருண்ட குஞ்சியும்,
சந்திர வதனமுந் தாழ்ந்த கைகளும்
சுந்தர மணிவரைத் தோளுமே யல"

பின் எதென்று கேட்பாயேல் என்னருமைத் தோழி !

"முந்தி யென்னுயிரை யுண்டதம் முறுவலே"

என்னைப் பார்த்து அப் பெருந்தகையாளர் ஓர் புன்முறுவல் பூத்தார். ஆ! அஃது இரும்பை யிழுக்கும் காந்தமன்ன என் னுயிரை யப்படியே கொள்ளை கொண்டு விட்டது. ஆகையால் நீ எனக்குக் கண்ணேறு கழிக் கவோ வேறு மற்று மொன்று செய்யவோ வேண்டுவதில்லை. நான் கேட்கும் கேள்விக்குத் தக்க பதிலளிப்பையேல் அஃதே நீ யெனக் குச் செய்த பேருதவியாகும்,'' என்று கூறினுள்.

அதைக் கேட்ட தோழி, "அம்மா! இவ்வளவு தானு? இது தானு பெரிய காரியம்? நீ என்ன கேட்க வேண்டுமோ கேள். நான் பதில் சொல் லுகிறேன்,'' என்றுள். அப்பொழுது பரவை, "அவ் வடியார் யாரென்பதை நீ எனக்கு அறிந்து கூற வேண்டும்'' என்று சொல்ல, அத் தோழி பரவை யைப் பார்த்து, "என், அருமைப் பரவை! உன் மனம் சென்று பதிந்திருப் பது யாவரும் மனதாலும் நினைத்தற்கரிதாகிய உயர்ந்த விடத்தன்றோ! உன் பாக்கியமே பாக்கியம். அவரைக் கண்டு, அவர் உன்னிடத்தில் காதல் முறுவல் செய்த பின்னும், நீ இவ்வளவு அடக்கத்துட னிருப்பது உனது உயர் குணத்தின் தன்மையையே காட்டுகின்றதே யன்றி வேறொன்றுமன்று. அவர் யாரென்றறிவதற்கு, யாரிடத்திலாவது சென்று வினவவோ, அன்றி வேறு வகைகளில் விசாரணை நடத்தவோ வேண்டியதன்று. அவர் உல கறிந்த பெருமானுயிற்றே! அவர் யாரெனில் கூறுகின்றேன் கவனமாய்க் கேள்'' என்று கூறலுற்றுள்.

"முன்னர் ஒரு கால் மாலும், அயனும் அடியும், முடியும் தேடியும் அகப் படா நின்ற சிவபிரானின் பெருமையை நீ நன்கறிவாயன்றோ. அத்தகைய சாக்ஷாத் சிவபிரானே "உன் காதலனுகிய'' அடியார்க்கு அன்றொரு நாள் "தோழமையாக உனக்கு நம்மைத் தந்தனம்'' என்று அருளிச் செய்தார். கைலயங்கிரியில் யாண்டும், மங்கல வாத்தியம் முழங்கவும், வேதவோசை விண்ணைத் துளைக்கவும், முப்பத்து முக்கோடி தேவர்களும் தொழுது நிற்க

வும், தும்புரு நாரதர் கீதம் பாடவும், பாகத்துப் பாவையுடன் சர்வமங்கள பூஷிதனாய் வீற்றிருக்கும் மும்மூர்த்திகளுக்கும் அப்பாற் கடந்த சாக்ஷாத் சிவபிரானே தானாகவே வந்து தோழனாக வேண்டும் என்றால், உனது காதலனின் பெருமைதானென்ன! அஃதை ஈராயிரம் நாப்படைத்த ஆதிசேடனாற் போலும் எடுத்துக் கூற வியலாதன்றோ! சுருங்கக் கூறின் சிவபிரானே உன்னைக் கண்டு காதலிக்கின்றார் என்று கூறினும் பொருந்தும். அவரை (ஸ்ரீ கண்ட வடியாரை) நம்பியாரூர ரென்றும், ஆலால சுந்தரரென்றும், நாவலூர ரென்றும், வன்றொண்ட ரென்றும் அழைப்பார்கள். அத்தகைய பெருமை யானரம்மா உன் மனதைக் கவர்ந்த மன்னன்," என்று கூறி முடித்தான்.

அதைக் கேட்ட பரவைக்கு வன்றொண்டர் பாலுள்ள காதல் அளவின்றிப் பொங்கி யெழுந்தது. அவர் கடவுளின் தோழர் என்றதைக் கேட்ட மாத்திரத்தில் அவர் மீதுள்ள வாசை யிரட்டித்து, பெண்களுக்குரிய அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு முதலிய நாற்குணங்களும் இருந்த விடம் தெரியாது மறைய தன் காதலன் மீதுள்ள காதல் மிகுதியாலும், அவர், தான் மனமார வணங்கும் சிவபிரானின் தோழன் என்றதின் அதிசய மிகுதியாலும், அறி விழந்து மயக்கமுற்று அம் மென்மல ரமளியின் மேற் சாய்ந்தாள்.

---

## ஸ்ரீ. வீர-சுப்பைய சுவாமிகள் சமாதி ஆலய மகா கும்பாபிஷேகம்

சென்னை சூளை, ஆனந்தாசிரமத் தலைவராயிருந்து, பிரசங்க வாயிலாக வேதாந்த உபதேசஞ் செய்துவந்தவரும், ஆன்ம புராண முதலிய ஞான நூல்களைத் தமிழில் மொழிபெயர்த்து உதவியவருமான ஸ்ரீமத் வீர சுப்பைய ஞானதேசிகேந்திர சுவாமிகள், சென்ற பிரஜோற்பத்தி வருஷத்தில் பரிபூரண மடைந்தது அன்பர்களுக்குத் தெரிந்திருக்கலாம். அத்தகைய பெரியாரது சமாதிக்குப் பல அன்பர்கள் பொருளுதவி புரிந்து ஆலய மகேஸ்வர பூஜா மண்டபமும் கட்டியிருக்கின்றனர். அவ்விதம் கட்டப்பட்டுள்ள ஆலயத்துக்கு நிகழும் ஈசுவர௵ ஆனி௴ 14௳ (27-6-37) ஞாயிறன்று காலை 7-மணிக்குமேல் கும்பாபிஷேகம் நடைபெறும் என அறிவிக்கப்படுகிறது.

# "தேவதாசி"

(டி. வி. ராமமூர்த்தி.)

திவான்பகதூர் விஜயரங்கம் தன் செல்வப் பெருக்கினாலும் கை தூக்கி ஸலாம் போடும் வித்தையில் தனக்குத்தானே சரி நிகர் சமானமாக விளங்கியபடியினாலும் திவான்பகதூர் பட்டம் வரை ஏறி விட்டார். ஆனால் அதற்கு அடுத்த உயர் சிகரமாகிய 'ஸர்' என்னும் பட்டத்தை அனுகியவராய் அதன் மீது தன் ஆசை நோக்கத்தை செலுத்திய வண்ணம் பட்டம் பதவிகளைக் கடந்த பேருலகம் போய்ச் சேர்ந்தார்.

விஜயரங்கய்ய நாதன் மித மிஞ்சிய செல்வச் செருக்கினாலும் ஆங்கிலேய சகவாச தோஷத்தினாலும் குடி வெறியில் தீராத மோகங் கொண்டிருந்தார். விதை ஒன்று விதைத்தால் சுரை ஒன்று முளைக்குமா ? எனவே குடி வெறியின் விளையாகிய சிற்றின்ப போக தகர்ச்சியிலும் அவர் தன்னிகரற்று விளங்கினார். தாசி வீடு செல்வதற்கு அவர் ஒருநாளும் தயங்கினதில்லை. பாட்டனாருடைய சொத்துக்கு பேரன தான் வார்சுதாரன் என்னும் உண்மையை நிருபணம் செய்யத்தான் பிறந்தாரோ என்னமோ அது நமக்குத் தெரியாது. ஆனால் அதை அழித்து பாழாக்கும் வித்தையில் அவர் சிறந்து விளங்கினார்.

மகனின் விபரீதப் போக்கு தந்தைக்கு கொஞ்சம் கூட பிடிக்க வில்லை. நயமாகவும் பயமாகவும் அவனைத் திருத்த தான் எடுத்துக் கொண்ட முயற்சிகள் எல்லாம் விழலுக்கிரைத்த நீரைப் போல பயனற்றுப்போவதை உணர்ந்த அவர் அவனுடன் அதிகமாக பேசுவதையும் விட்டு விட்டார். தான் சுயார்ஜிதமாக சம்பாதித்த சொத்துகளையும் அவன் எங்கே அழித்துவிடுவானோ என்ற அச்சத்தினால் அவர் தன்னுடைய சொந்த சொத்துக்களின் பேரில் அவனுக்குள்ள பாத்தியதைகளைச் சட்டபூர்வமாக தடுத்து விட்டு அவைகளை தன் மருமகள் பேரில் சாசனம் செய்து வைத்தார்.

தான் தன்னுடைய ஒரே மகனை எவ்வளவோ சுகத்திலும் செல்வத்திலும் வைத்து பேரன் பேத்திகளை எடுத்து கண் குளிர ஆனந்திக்கலாம் என்று மனக்கோட்டை கட்டிக் கொண்டிருந்த அவர் கண்ணீரும் கம்பலையுமாய் சதா தன் மனக்கண் முன் தோன்றும் தன் மருமகளை காணும் தோறும் சொல்லொணா வேதனை அடைந்தார். அவ் வூரில் மிகப் பிரபல தேவ கைங்கர்ய பணியில் வழி வழி வந்த 'பாக்கியம்' என்பவள் வீட்டிலேயே சாப்பாடு படுக்கை யாவற்றையும் வைத்துக் கொண்ட விஜயரங்கம் தன் தந்தையையும் இளம் மனைவியையும் எட்டிக் கூட பார்க்க வில்லை. ஆங்கிலேய துரைகளை டீ பார்ட்டி, டின்னர் பார்ட்டி முதலியவை வைத்து சிநேகம் செய்து கொள்வதும் குஷாலாய் பொழுது போக்குவதுமே தன் வாழ்க்கை லக்ஷியங்களாக கொண்டிருந்த அவர் தான் இறப்பதற்கு முன்பு தன்னைப் பின் பற்றி பெயர் சொல்

லக் கூடிய ஒரு சத் விஷயத்திலேனும் ஈடுபடாமல் போயினும் தன் ஆயுளின் ஞாபகார்த்தமாக ஒன்றையேனும் விட்டுச் சென்றார்.

அவர் அருமைச் செல்வன் ராஜசேகரன் எங்கே தன் தந்தையின் காலடிகளை பின் பற்றுவானோ என்ற ஒரே திகிலினால் வேதனை அடைந்த அவன் பாட்டனார் அவனுக்கு வித்தை புகட்டுவதில் விசேஷ அக்கரை எடுத்துக் கொண்டார். அத்துடன் அவனை மிகவும் ஜாக்கிரதையுடன் கண் காணித்து வந்தார்.

'சக்தி ஒருநாளும் அழியாது; அது அழிந்து போவதாக காணப்படினும் திரும்பவும் அது வேறு ரூபத்தில் பிரதி பலிக்கத்தான் செய்யும்' என்று பௌதீக சாஸ்திரம் கூறுகின்றது. எனவே பிதாவின் சக்தி பிள்ளையிடம் வேறின்றி நாளொரு மேனியும், பொழுதொரு வண்ணமுமாய் வளர்ந்து வந்ததில் ஆச்சர்ய மில்லை. ஆனால் எரிமலை போல் உள்ளேயே புகைந்து கொண்டிருந்த அந்த சக்தி மிகுந்த ஆக்ரோஷத்துடன் வெளிப்பட்டு வரும் போது எல்லாம் மிகுந்த கட்டுப்பாட்டுக் குள்ளிருந்த ராஜசேகரன் கூட கொஞ்சம் சபல புத்தி அடைந்தான். ஆனால் அந்த சமயங்களில் எல்லாம் அவன் பாட்டனார் அவனை வழிக்கு கொண்டுவர எடுத்துக் கொண்ட சிரமம் கொஞ்ச நஞ்சமல்ல. ஆனால் உழைப்புக்கு தகுந்த கூலியையும் அவர் அடைய தவற வில்லை. ராஜசேகரன் கூடிய வரை ஒழுங்காகவே நடந்து வந்தான்.

அவன் ராஜதானி கல்லூரியில் பி. ஏ. வகுப்பில் வாசித்துக் கொண்டிருந்தான். ஒரு மனிதனுடைய வாழ் நாட்களிலேயே குடும்பக் கவலை துன்பம் எதுமின்றி குஷியாக காலம் தள்ளக் கூடிய ஒரு பகுதி இருக்கக் கூடுமானால் அது கலாசாலையில் படிக்கும் பொழுதுள்ள சமயத்தை தவிர வேறு எதாய் இருக்க முடியும்? அதனையும் பூரணவாய் அனுபவிக்க வேண்டும் என்றால் ஹாஸ்டலில் உள்ள மாணவர்களைக் கேட்டால் அவர்கள் நன்கு விளக்குவார்கள். கலாசாலையி லிருந்து விடுமுறை நாட்களுக்கு வீடு திரும்பும் பொழுது பெருமித நடையுடன் வரும் அம் மாணவனின் முகத்தைக் கண்டு எந்த தாயின் முகம் மலராது? எந்த கன்னியின் உள்ளம் மகிழாது? எந்த தகப்பனின் மனம் குதூகல மடையாது?

ராஜசேகரன் எந்த வகுப்பிலும் முதலில் தேறி வந்தபடியால் மற்ற மாணவர்களுக்கு தெரியாத விஷயங்களை எல்லாம் இவனை கேட்டுத் தெரிந்துகொள்ள சதா சர்வகாலமும் மாணவர்கள் இவனை சுற்றிக் கொண்டு நிற்பார்கள். இவனும் கர்வமில்லாமலும் சங்கோஜமில்லாமலும் மற்றவர்களுடைய சந்தேகங்களை விளக்கமாக எடுத்துக் கூறும் விதத்தை கவனித்த கலாசாலை ஆசிரியர்களும் இவன் புத்தி விசாலத்தை ஒருங்கே கொண்டாடினார்கள்.

ஒரு சமயம் ராஜதானி கல்லூரியில் ஒரு தர்க்க ரீதியான விவாதத்திற்கு ஏற்பாடு செய்திருந்தார்கள். அதில் மற்ற கலாசாலைகளும் பங்கெடுத்துக் கொண்டன. 'பெண்களுக்கு சம உரிமை அளிக்கப்பட வேண்டியது அவசியமா? இல்லையா?' என்பது விவாதத்திற்குக் கோரப்பட்டது.

ராஜ சேகரன் எல்லா பொது நிகழ்ச்சிகளிலும் முக்கிய பங்கெடுத்துக் கொண்டு கலந்து கொள்பவனா யிருந்தும் அன்று யாதுகாரணம் பற்றியே

அவன் இந்த விவாதத்தில் கலந்து கொள்ள விரும்ப வில்லை. ராணி மேரி கலாசாலையில் இருந்து பிரதிநிதியாக வரப் போகும் சரோஜா என்னும் ஒரு மங்கை 'பெண்கள் சம அந்தஸ்து அடைய வேண்டுவது அவசியம்' என்று வற்புறுத்துவார் என்று முன்னமேயே அறிவிக்கப் பட்டிருந்தபடியால் எங்கும் ஒரே இரைச்சலும் குதூகலமுமாய் இருந்தது. அநேக 'இண்டர் கலீஜியேட்' வியாசப் போட்டிகளில் அவள் முதற் பரிசு பெற்றிருந்த படியால் ராஜசேகரன் முன்னமேயே அவளைப்பற்றி கேள்வி யுற்றிருந்தான். அவளை நேரில் காண வேண்டும் என்று அவாகொண்டிருந்த அநேக மாணவர்களும் பொது ஜனங்களும் ஏராளமாக கூடி யிருந்தார்கள்.

கிறிஸ்தவ கலாசாலையிலிருந்து வந்திருந்த நடராஜன் என்ற ஒரு பி. ஏ. வகுப்பு மாணவன் விவாதத்தை ஆரம்பித்து வைத்தான். 'ஸ்திரீகளும் ஆண்களுக்கு சமமாக சமூக நிலையில் சம உரிமை கேட்பதானது ஒரு அர்த்தமற்ற வாதமாகும். ஈஸ்வரன் சிருஷ்டியிலேயே கண்டுணர வேண்டிய இவ் விஷயத்தை அனுவசியமாக இவ்வளவு தூரம் வளர்ப்பதும் நமது அறியாமையே. ஆடவருக்கு அளிக்கப்படும் கல்வி அறிவிற் கேற்ப அவர்களுடைய இயற்கையான புத்தி கூர்மையும் அதற்கேற்ற உடலமைப்பும் அவர்கள் வெளியில் ஓடியாடி திரியவும் சமூக ஒழுங்கை பாதுகாக்கவும் ஏற்பட்டதைப் போல, ஸ்திரீகளுக்கு இயற்கை சிருஷ்டியால் அளிக்கப்பட்ட மேன்மையான தேகம் வீட்டு விஷயங்களை கவனிக்க ஏற்பட்டது என்பதை எந்த சாதாரண அறிவுள்ளவனும் ஒப்புக் கொள்வான். தற்கால நவீன நாகரிக மோகத்தில் அப்படியே இரண்டொரு ஸ்திரீகள் பொது வாழ்வில் ஈடுபட்டாலும் அதனால் அவர்கள் எவ்வளவு கஷ்ட நிஷ்டூரங்களை அனுபவிக்கின்றார்கள் என்பதையும் நாம் கண்கூடாக பார்க்கின்றோம். மேலும் 'பெண் புத்தி பின் புத்தி' என்றும், 'பெண் புத்தி பேதமைத்தே' என்றும் அறிவாளிகள் அனுபவ வாயிலாக கூறிய மொழிகள் இதனை நன்கு விளக்கும்'' என்று கூறி உட்கார்ந்தான். பின்னால் சிலர் அதை ஒட்டியே பேசினார்கள். கடைசியாக மிகுந்த கரகோஷத்தினிடையே எழுந்து நின்ற சரோஜா என்னும் வனிதை எல்லோருக்கும் வந்தன மளித்து விட்டு 'தற்பொழுது நண்பர் நடராஜன் கூறிய மொழிகளைக் கண்டு நான் ஆச்சர்ய மடைகின்றேன். அதுவும் தற்கால நாகரிகத்தில் பெண்களுக்குச் சுதந்திரம்; பின்னர் தான் நாட்டுக்குச் சுதந்திரம் என்ற கூக்குரல் எங்கும் கேட்கப்படும் இந்த சமயத்தில் இவர் இம்மாதிரி இச்சபையில் பேசியதும் அதை நாம் கேட்டு கை கொட்டி ஆர்ப்பரிக்க நேர்ந்ததும் வருந்தத்தக்க விஷயம். இவர் கல்வி வாசனை அறியாத பாமர மக்களில் ஒருவரா யிருந்திருக்கும் பக்ஷத்தில் அதைப்பற்றி நமக்கு அக்கரை யில்லை. கல்வி அறிவுள்ள இந்த நண்பரின் விபரீதப் போக்கைக் கண்டு நாம் வருத்தப்படுவதைத் தவிர வேறு ஒன்றும் செய்வதற்கில்லை. எந்த விஷயத்தில் ஸ்திரீகள் பின் அணியில் நிற்கின்றார்கள் என்று நான் கேட்கிறேன். பொறுப்புள்ள நண்பர் பதில் கூறட்டும். பொதுவாக கூறுவதை விட்டுவிட்டு குறிப்பிட்டு கூறினால்தான் அதை வாதம் என்று பொருள்பட கூறியதாகச் சேர்க்கலாம். ஆற்றல் இல்லையா? அறிவு இல்லையா? தைர்யமில்லையா? எது இல்லை! ஒவ்வொன்றிலும் நான் அநேக திருஷ்டாந்தங்கள் கூறமுடியும். விமானப் பயிற்சியிலோ நீந்தற் போட்டியிலோ கல்வி கேள்விகளிலோ பொது வாழ்விலோ ஆண்களைவிட உற்சாகம் காட்டக்கூடிய பெண்

4

களை நான் குறிப்பிட்டுக் கூறமுடியும். ஆமி மாலிசன் என்ன ! சாந்த் பீபி என்ன ! சரோஜனி நாயுடு என்ன! ருக்மணிலக்ஷ்மீபதி என்ன! இவர்கள் எந்த விஷயத்தில் ஆண்களைவிட தாழ்ந்தவர்கள். நண்பர் பதில் அளிப்பாரா ? இனி மேல் நான் அதிகம் கூறினால் அது அதிகபிரசங்கித் தனமாய் முடியும் ஆகை யால் நான் இத்துடன் நிறுத்திக் கொள்கிறேன்" என்று கூறி உட்கார்ந்த பொழுது ஆரவாரம் வானைப் பிளந்தது. அதை பின் தொடர்ந்து வந்த கர கோஷத்திற் கிணையாக ராஜசேகரன் எங்கும் கண்டதில்லை. சாதாரணமாய் எதிலும் பங்கு எடுத்துக்கொள்ளும் அவன் அன்று அவளுடைய அதி கூர்மை யான புத்தி தீக்ஷண்யத்தையும் வாக்குவன்மையையும் கண்டு அவன் சிந்தனையி லேயே மூழ்கி விட்டான். பின்பு எல்லோரும் எழுந்து சென்றபின் அவளைப் பின்தொடர்ந்தான். அவள் எம். ஏ. வகுப்பில் வாசிக்கிறாள் என்பதையும் ஹாஸ்டலிலேயே இருக்கிறாள் என்பதையும் அறிந்து கொண்டான்.

ஏற்கனவே கூறியபடி இவன் எந்த வகுப்பிலும் முதலில் தேறிவந்த படியினால் இவனுடைய சிநேகம் பெறவேண்டி இவனை அறிமுகம் செய்து கொண்டவர்கள் எல்லா கலாசாலைகளிலும் இருந்தார்கள். ராணி மேரி கலா சாலையிலும் இவன் நண்பர்கள் இல்லாமல் போகவில்லை. அதனால் அவர்களின் துணையைக் கொண்டு சரோஜாவின் சிநேகத்தை இவன் பெற விரும்பினான். சரோஜாவும் ஏற்கனவே ராஜசேகரனைப்பற்றி கேள்விப்பட் டிருந்தபடியால் அவனைக் கண்டதும் அவனிடம் பேச அவள் தயங்கவில்லை. அவனுக்கு அவ ளிடம் தூய்மையான அன்பு ஜனித்தது. அவள் ஒரு அதிசௌந்தர்ய மோ ஹினியாய் விளங்கினாள். அவளை ஒரு ரோஜா புஷ்பத்திற்கு ஒப்பிடலாம். உண்மையில் அவளைச் சுற்றி முட்களும் அடர்ந்திருந்தன. அந்த முட்களை பிடுங்கி எறிய அவனுக்கு தைரியம் இல்லை. தன் பாட்டனாரின் காவலுக் கஞ்சினான். அவள் தேவதாசி வகுப்பில் உதித்தவள் என்பதை அறிந்த பிறகு அவளுடன் பேசுவதற்கும் அவன் அஞ்சினான். அவளை காணாத இடத் தில் அவள் குலம் காரணமாக அவளிடம் ஒருவித அசூயை இவன் கொண் டது உண்மையாயினும், நேரில் அவளைக் காணும்பொழுது அவளிடம் பேசா மல் போக அவன் மனம் இடந்தரவில்லை. ஒருநாள் அவளைக் காணாமல் போனால் ஒரு யுகம் கழிவதுபோல் அவனுக்கு தோன்றியது. அவளில்லாமல் தனது ஆயுட்காலம் பூராவையும் எப்படி கழிப்பது என்று அவனுக்கு தோன்றவேயில்லை. அவனுடைய மனம் என்னும் இரும்பை பிடித்திழுத்த மோஹன வடிவாம் அந்த காந்தசக்தியைக் கண்டு இவன் உருகியதில் ஆச் சர்யம இல்லை. ஆகவே அவனுடைய மனோதிடம் எல்லாம் அவளைக் கண்ட விடத்து சூரியனைக்கண்ட பனிபோல் மறைந்து அச்சூரியனைக் கண்டு மல ரும் தாமரை மலரை நிகர்த்தது.

அவளும் ராஜசேகரனிடம் தன் பரிசுத்தமான மனதினின்றும் உற்ப வித்த காதல் என்னும் விதையை ஊன்ற ஏற்ற இடம் ஒன்றைக் கண்டு கொண்டதாக உணர்ந்தாள். பாவம்! பேதை தன் குலத்தை எண்ணவில்லை போலும்! தான் கலாசாலை அலுவல்களில் எவ்வளவோ ஆடவருடன் பழகியும் அனுபவியாத ஒரு உணர்ச்சியை ராஜசேகரனைக் காணும்தோறும் அவள் அடைந்தாள். இருவரும் கடற்கரையில் வழக்கமாக வெகு நேரம்வரை பேசிக் கொண்டிருப்பார்கள். சில சமயங்களில் வேறு சில நண்பர்களும் இருப்பார்கள். ஒருநாள் வேறொருவரும் இன்றி இவர்கள் தனிமையில்

இருந்தனர். குளிர்ந்த வெண்ணிலவு வீசிக் கொண்டிருந்தது: சரத் காலத்தில் சுக்லபக்ஷத்து சந்திரன் தன் இன்பமயமான கிரணங்களை வாரி இறைத்துக் கொண்டு குளிர்ந்த மந்தமாருதத்திடையே தோன்றியபொழுது சரோஜா தன் காதல் உணர்ச்சியின் உச்சஸ்தானத்தை அடைந்தாள். ஆகவே அவனிடம் ஒளிவு மறைவின்றி அதை கூறாமல் இருக்க முடியவில்லை. தட்டுத் தடுமாறிக் கொண்டே தயங்கி தயங்கிக் கூறும் அவள் மனோநிலையை ராஜசேகரன் உணராமல் இல்லை. தன்னுடைய குடும்ப நிலைக்கும் அவளுடைய குடும்ப நிலைமைக்கும் மலைக்கும் மடுவுக்குமுள்ள வித்தியாசம் என்பதை அவளுக்கு அறிவிக்க எண்ணினான். ஆனால் கல்வியிலும் அழகிலும் சிறந்து விளங்கின அவளுடைய தோற்றமும் அவளுடைய அழகிய முக மண்டலத்தில் தோன்றிய இளம் புன்னகையும் அவனை நிலைதடுமாறச் செய்து அவள் தாசி குடும்பத்தில் பிறந்தவள் என்பதை மறக்கச் செய்தது. பின்னர் நடந்ததை நாம் அதிகம் விளக்கத் தேவையில்லை. அதன்பின் அவர்களிடம் தோன்றிய காதல் என்னும் செடி பூ பிஞ்சு இலைகளுடன் மரமாகி ஓங்கித் தழைத்தது.

நாட்கள் பல சென்றன. கலாசாலைப் படிப்பும் முடிந்தது. அக் காதல் மரமும் அழகிய தீங்கனி ஒன்றை ஈனும் சமயம். சரோஜா எட்டுமாத நிறை கர்ப்பிணியா யிருந்தாள். அந்தச் சமயத்தில் அவளிடம் என்றும் காணாத ஒரு புதிய முகஜோதியையும் வசீகரத்தையும் கவனித்த துர்ப்பாக்கிய ராஜசேகரன் "ஓஹோ! நிலைமை சுத்த கேவலமாகவல்லவோ முடிந்துவிடும் போலிருக்கிறது, இனிமேல் நாம் தயங்குவதில் பிரயோசனமில்லை" என்று மனதைத் திடப்படுத்திக் கொண்டான். பாட்டனாரிடம் விஷயத்தைக் கூறி அவர் சம்மதத்தைப் பெறவும் அவன் அஞ்சினான்.

தன் விடுமுறை நாட்களைக் கழிக்க ஊருக்குப்போக எண்ணி ராஜசேகரன் அதை அவளிடம் கூறினான். அவள் அவனிடம் தன் அபாயகரமான நிலைமையைத் தெளிவாகக் கூறி, "அன்ப! இனிமேல் ஒன்றும் தாமதம் செய்யக் கூடாது. சீக்கிரம் விவாகத்திற்கு ஏற்பாடு செய்யவேண்டும்" என்று வற்புறுத்தினாள். ராஜசேகரனும் சீக்கிரம் வருவதாகக் கூறி ஊருக்குப் புறப்பட்டான்.

தன்னைவிட அதிவேகமாய் பிரயாணம் செய்யும் உள்ளத்தை மறைந்திருந்த ஒரு பிரயாணியை ஏற்றிச் செல்கிறோம் என்பதை அறியாமலே ரயில் வண்டியும் வேகமாய் சென்று கொண்டிருந்தது. ராஜசேகரன் அசையாமல் வண்டியில் உட்கார்ந்திருந்தானென்றாலும் அவன் மனம் என்னமோ தன் பாட்டனாருக்கும் சரோஜாவுக்கு மிடையே ஊசலாடிக் கொண்டிருந்தது.

தன் பாட்டனாரின் உடம்பு மிகவும் துர்ப்பலமா யிருந்தது கண்டு அவன் வருந்தினான். தன் வாழ் நாட்களில் இறுதிக் காலத்தில் தன் பேரனை அருகில் அழைத்து வைத்துக்கொண்டு கிழவர் "அப்பா குழந்தாய் ராஜசேகரா! உன் தகப்பனார் தான் என் பேச்சைக் கேளாது தாசி வீடே கதி என்று இருந்து கொண்டு என்னையும் உன் தாயையும் லக்ஷியம் கூட செய்யவில்லை; நீயாவது நம் குடும்பத்திலேயே நல்ல பெண்ணாக ஒருவளைப் பார்த்து விவாகம் செய்துகொண்டு யோக்கியன் என்று பெயர் எடுத்து என் ஆன்மா சாந்தி அடைய வழி உண்டு பண்ணுவாய் என்று நம்புகிறேன். அதுமாதிரி நடப்பதாக

என் முன்பாக நீ வாக்குத் தத்தம் செய்து கொடுத்தால் நான் நிம்மதியாக இறந்து போவேன்" என்று கூறி மிகுந்த கவலையோடு அவன் முகத்தை கூர்ந்து நோக்கினர். ராஜசேகரன் மனதில் சரோஜாவின் உருவம் பளிச் என்று ஒரு மின்னலைப் போல் தோன்றி மறைந்தது. தாசி குடும்பத்தில் பிறந்த ஒருவளுக்காக தன்னை அரும் பாடுபட்டு வளர்த்த தன் பாட்டனரின் அந்திக் காலத்தில் அவர் இஷ்டத்திற்கு விரோதமாக நடக்க அவன் விரும்பவில்லை. அப்படியானல் சரோஜாவின் கதி என்ன? அவன் மனதில் ஒரு பெரிய போராட்டம் நிகழ்ந்தது. கடைசியில் பாட்டனர் வெற்றி அடைந்தார். அவர் இஷ்டப்படியே நடக்க ராஜசேகரன் உறுதி கொண்டான். அதனல் சிறிதும் தயங்காமல் அவர் கேட்ட வண்ணமே கிழவரின் முன்பாக சத்தியம் செய்து கொடுத்தான். கிழவரின் மனம் சாந்தி அடைந்தது. பாவம்! சிறிதேனும் சரோஜாவை அறிவாரா? அவர் மட்டும் அறிந்திருந்தால்............ நிலைமை வேறு விதமாக மாறியிருக்கும். அதில் சந்தேகம் என்ன? உண்மை காதலுக்கு முன் குலம் என்ன செய்யும்? வேறு என்ன தான் அதைத் தகர்க்க முடியும்!

கிழவர் படுக்கையை விட்டு எழக்கூட சக்தி யின்றி அவ்வளவு கேவல ஸ்திதியில் இருந்தார். நாளுக்கு நாள் அவர் நிலைமை மோசமாகிக் கொண்டே போயிற்றே ஒழிய அபிவிருத்தி இல்லை. நாட்கள் ஒன்றன் பின் ஒன்ருய் பல சென்றன. தன் காதலனிட மிருந்து ஒருவித தகவலையும் அறியாத சரோஜா மிகுந்த கவலை அடைந்தாள். அவள் முகத்தில் சந்தோஷம் என்பது என்னத் தனையு மில்லை. கடைசியாக அவனுக்கு ஒரு கடிதம் எழுதத் துணிந்தாள். தன்னுடைய நிலைமை மிகவும் கேவிக் கிடமாக இருப்பதாகவும் இன்னும் ஒரு வாரத்திற்குள் தன்னை வந்து கண்டு கொள்ளா விடில் தான் உயிருடன் இருப்பது சந்தேகம் என்றும் உடனே புறப்பட்டு வரும்படியும் எழுதியிருந்தாள். ஒரு வாரத்திற்குள் அவள் பதில் கடிதத்தையும் பெற்ருள். தன் காதலனின் கடிதத்தை ஆவலுடன் பிரித்தாள். அவள் முகத்தில் முதலில் ஜ்வலித்த ஒளி மங்கியது. கண்கள் கலங்கின.

அன்பு மிக்க சரோஜா,

நின் கடிதம் கிடைத்தது. உனக்கு விஷயத்தை எடுத்துச் சொல்ல வருத்தமாயிருக்கிறது. ஆயினும் வேறு வழியில்லை. என் செய்வது? என் பாட்டனரைக் குறித்து முன்னமேயே அறிவித் திருக்கிறேன். என்னை முன்னுக்கு கொண்டுவர அவர் எவ்வளவு பாடுபட்டார் என்பது உனக்குத் தெரியும். அவருடைய இஷ்டத்திற்கு மீறி நடக்க என் மன சாக்ஷி இடந்தர வில்லை. அதற்காக நீ வருந்தாதே! உன் குலாசாரப் படி நீ வேறு உன் மனதிற்கிசைந்த ஆடவனை வரித்துக் கொணடு இல் வாழ்க்கையை நன்கு நடத்துவாய் என்று நம்புகிறேன். இதுவே எனது கடைசி கடிதம். இந்த முடிவு நமக்கு எவ்வளவு வருத்தத்தைக் கொடுக்கும் என்பதை நான் அறிந்திருந்தும் வேறு வழியின்றி இம் முடிவுக்கு வந்திருக்கிறேன். நீ வீணுக வருத்தப் பட்டு கலங்காதே! கண்மணி! கடைசி முறையாக கண்மணி என்று என் வாயால் கூற முடியாமல் போயினும், கடிதத்திலாவது எழுத அனுமதிப்பாய் என்று நம்புகிறேன். வந்தனம்.

இப்படிக்கு.
உன் அன்பன் ராஜசேகரன்.

கடிதத்தைக் கண்டதும் சரோஜாவின் சிரம் சுழன்றது. கண்களில் தீப் பொறி வீசின. கடிதத்தை மறு முறையும் வாசித்தாள்.

"எவ்வளவு சாவதானமாய் அலட்சியமாய் விஷயத்தை ஏதோ சாதாரண சம்பவம் போல் கூறியிருக்கின்றாய்! வருந்தாதே! ஆம்! ஆம் குலாசாரம்! தாசி குலத்தில் பிறந்த எனக்கு என்ன வருத்தம்! நீ போனால் என் மனதிற் கிசைந்த இன்னொருவன்! இவ்வளவு தானே! கொஞ்சமாவது தட்டுத் தடங்கலின்றி தொடர்ச்சியாய் விஷயத்தை தெரிவிக்கும் மகானுபாவனுக்கு மனக்கஷ்டம் வேறு குறையா? இந்த லக்ஷணத்தில் கண்மணி! வார்த்தை எவ்வளவு சொகுசு! வந்தனமாம் வந்தனம்! எதற்காக? என்னை விட்டு பிரிந்து செல்வதற்காக கடவுளுக்கு வந்தனம் கூற வேண்டாமா? கேவலம் மிருக உணர்ச்சியை அடக்கமட்டும் என்னை ஒரு கருவியாக உபயோகித்த ஏ மானிடப் பதரே! உன் பிரிய பாட்டனாருக்கு விரோதமாக போக உன் மன சாக்ஷி இடந்தரவில்லையா? உனக்கு மன சாக்ஷி என்று கூட ஒன்று உண்டா?" என்று இவ்வாறெல்லாம் தன் மனம் போனவாறு ஏதேதோ பித்தங் கொண்டவளைப் போல் பிதற்றினள், கடைசியில் ஏதோ ஒரு வெறி கொண்டவள் போல எழுந்தாள். ஒரு கடிதத்தை எடுத்தாள். "ஏ மானிடனே! உனக்கு கேவலம் உன் மிருக உணர்ச்சியை அடக்க மட்டும் ஒரு கருவியாக சில காலம் அமைந்த நான் இப்பொழுது உன்னை விட்டு பிரிந்து செல்கின்றேன். உனக்கு இனிமேல் நான் தேவையில்லை! ஆனால் ஒன்று மட்டும் மறந்து விடாமல் உன் நினைவில் வைத்திரு! இந்தியாவின் புராதன நாகரீக சின்னமாக விளங்கும் கற்பு என்பது எல்லா மங்கையரிடமு முண்டு. என் மூலம் மட்டும் அதற்கு விதி விலக்கல்லவ. ஏதோ வயிற்றுப் பிழைப்புக்காக சிலர் அதைத் தொழிலாக கொண்டிருந்தாலும் எல்லோரும் அதை ஒரு கலையாக வளர்க்கவில்லை. உன்னை நம்பியிருந்த என்னை நீ கை விட்டாலும் என்னைப் படைத்த கடவுளே என்னை திரும்பவும் ஏற்றுக் கொள்வார். தாசி என்று என்னை ஏச மாட்டார்! இன்னும் ஒரு மணி நேரத்தில் நான் சவமாய் கிடப்பேன். நீயாவது யோக்கியனாய் வேறு உன் மனதிற்கிசைந்த மங்கையை வரித்துக் கொண்டு இல் வாழ்க்கையை நன்கு நடத்திக் கொண்டு சந்தோஷமா யிரு" என்று எழுதித் தபாலில் சேர்த்து விட்டு கிணற்றில் விழுந்து தன் உயிரை மாய்த்துக் கொண்டாள்.

கடிதத்தைக் கண்ட ராஜசேகரன் கலங்கினன். கண்களி னின்றும் கண்ணீர் ஆறாய் பெருகியது. தன் காதலியின் கதியை நினைத்து வாய்விட்டழுதும் அவன் துக்கம் தீரவில்லை.

அவன் பாட்டனார் மரணவஸ்தையில் இருந்தார். ராஜசேகரன் அருகில் வந்ததும் "அப்பா ராஜசேகரா! ஒரே ஒரு சங்கதி, கவனமாய்க் கேள். நான் இறந்து போன பின் இரும்பு பெட்டியில் இருக்கும் ஸீல் வைத்த கடிதத்தை படித்து உண்மையை அறிந்து கொள்" என்று கூறிக் கொண்டே பிரக்ஞை அற்று கீழே விழுந்து விட்டார். பிறகு அவர் எழுந்து பேசவில்லை.

பாட்டனார் இறந்த துக்கம் ஒருவாறு தணிந்த பின் ஆவலுடன் கடிதத்தை உடைத்துப் பார்த்தான். என்னவென்று நினைக்கின்றீர்கள்: சொன்

ளுல் நம்ப மாட்டீர்கள். அவனையே படிக்கச் சொல்வோம் "குழந்தாய் ராஜா உன் பிறப்பு வளர்ச்சியை குறித்து உனக்குத் தெரியாது! இதுவரை உனக்கு தெரிய வேண்டிய பிரமேயம் வரவில்லை. உனக்கும் வயது வந்துவிட்ட படியினாலும் உனக்கும் விஷயம் தெரியவேண்டி யிருப்பதாலும் இப்பொழுது சொல்லுகின்றேன். இவ்வூரில் பாக்கியம் என்று ஒரு தேவதாசி இருந்தாள். உன் தந்தை அங்குதான் இருந்தார். உனக்கும் அது தெரிந்திருக்கலாம். அவளுக்குத் தான் நீ பிறந்தாய்........................." ராஜசேகரன் தலை ஆட்டங் கொடுத்தது. கையிலிருந்து கடிதம் நழுவியது. சிரமப்பட்டு சமாளித்துக் கொண்டு மேலே படித்தான். "என் மருமகள் பெயருக்குத் தான் உன் தாயே தவிர, உன் சொந்தத் தாய் பாக்கியம் தான். உன் தந்தை என் ஒரே மகன்; ஆகையாலும் உன் தந்தை இறந்த பிறகு அவன் மேல் எனக்கு எவ்வளவு வருத்த மிருந்தபோதிலும் அவனுக்கு பிறந்த உன்னை கை விட எனக்கு மன மில்லாதபடியால் உன்னை அங்கிருந்து இங்கு கொண்டு வந்து வளர்த்து வருகின்றேன். பாக்கியமும் உன் தந்தையோ டிருந்தவரை யோக்கியமாகவே யிருந்தாள். உன் தந்தை இறந்த துக்கத்தால் தான் அவளும் கவலையால் உடல் மெலிந்து இறந்ததாக பிரஸ்தாபம். இதைக் குறித்து நீ வருந்தாதே! நீயாவது யோக்கியமா யிருந்து கொண்டு நற்பெயர் எடுக்க எனக்குப் பின் என் ஆஸ்திகளை ஆண்டனுபவிக்க ஈசன் அருள் பாலிப்பானாக". ராஜசேகரன் தடால் என்று கீழே விழுந்தான். உணர்ச்சியும் இழந்தான்.

"தாசி வயிற்றில் பிறந்த நான் அழகிலும் குணத்திலும் சிறந்து விளங்கிய ஒரு வனிதா ரத்தினத்தை, அவள் ஒரு தாசி என்று கேவலப் படுத்தியது என்ன அவமானகரமான விஷயம்! நான் யார்? தாசி பிள்ளை யில்லையா? பின்னர் சரோஜாவை மணந்து கொள்ள தடை என்ன? அதற்கு என்ன ஆக்ஷேபனை? ஆனால் வெள்ளம் வந்த பின் அணை கோல முயல்வது போல இப்பொழுது வருந்தி பயன் என்ன? என்னால் அல்லவா அவள் தற்கொலை செய்து கொண்டாள்! என் வாழ் நாட்களில் இந்த ஒரு அனுபவத்தைக் கொண்டாவது குலம் காரணமாக ஒருவரையும் அலட்சியம் செய்யாது குணத்தையே பிரதானமாக ஜனங்கள் கருதவேண்டும்" என்று தினம் அவன் பிரசாரம் செய்தவண்ண மிருக்கின்றான். ஹரிஜன சேவையும் செய்து வருவதாகக் கேள்வி. இதனாலாவது சரோஜாவின் ஆத்மா சாந்தி அடையுமா?



நந்தப்பள்ளத்

# திருவிடை மருதூர்

(மனுநீதிகண்ட சோழனின் பக்தி யுணர்ச்சியை விளக்கும் கிராமம்)

நாகை-என்-பாலசுப்ரமண்யம் எழுதுவது.

"ஒரு ராஜாமாதிரி தெரிகிறதே!"

"இல்லே, இல்லே; ஒரு ரிஷியாட்டமா......"

"ரிஷிக்கு மீசை யுண்டா?"

"ஏன் இல்லே? தாடியை மாத்திரம் வளர்த்துக்கொண்டு மீசையை மாத்திரம் சிறைத்துக் கொள்வார்களா ரிஷிகள்?"

"அப்படிப் பார்த்தாலும் தாடியைக் காணுமே?"

"ஆம்—ஆ——ஆ—ஆம்!"

'இன்னொரு விஷயமல்லவா? இதோ பாருங்கள், ராஜ அங்கியை! எண்ணெய்க்களிம்பு ஏறி இருந்தாலுங்கூட நன்றாகத் தெரிகிறதே? ராஜா தான் சந்தேகமில்லே.'

"ராஜ விக்கிரகத்தை நந்திக்கு முன்னல் வைக்கவேண்டிய அவஸியம் என்ன வந்ததோ தெரியவில்லே?"

"இந்தக் கோயிலே ஒரு சமயம் அவர் கட்டுவித்திருக்கலாம்..........." என்று நான் எனது சிநேகிதருக்கு பதிலளித்துக் கொண்டிருக்கும்பொழுது,

"அது மனுநீதிகண்ட சோழனின் விக்கிரகம்!" என்று ஒரு குரல் கேட்டது. நாங்கள் சுற்றிச் சுற்றிப் பார்த்தோம்; ஒருவரையும் காணவில்லே.

"என்னடா அதிசயமாயிருக்கு! அசரீரி என்கிறுளே அதுதானே. என்பதாக நாங்கள் நினைத்திருப்போமென்று நீங்கள் எதிர்பார்க்கின்றீர்கள்? ஆம். நாங்கள் ஆராய்ச்சி செய்து கொண்டிருந்த கோயிலுக்கு வடவண்டைச் சாரி வீட்டுத் திண்ணேயிலிருந்த ஐயர் மாத்திரம் தொடர்ந் தொட்டியாகப் பேசாம லிருந்திருக்கும் பக்ஷத்தில் நீங்கள் எதிர்பார்த்த விஷயத்தை நாங்கள் ஒப்புக்கொண்டுதான் தீரவேண்டும். அவர் தொடர்ந்து பேசியது இதுதான்:-

"நமக்கு எந்த ஆரோ? இந்தமாதிரி பூர்வீகக் கட்டிடங்களேயும் கோவில்களேயும் பிரேமையோடு ஆராய்ச்சி செய்கிறவான் இந்தக் காலத்தில் கிடைப்பது கஷ்டம்.'

"அதனாலேயேதான் இந்த காலத்து விஷயங்கள் ஒன்றையும் தெளிவாக அறியக் கூடவில்லை" என்று சொல்லிக்கொண்டே எனது தோழர் தமிழ்ப்பண்டிதர், ஐயர்வாள் வீட்டை நோக்கிச் சென்றார். நானும் பின் தொடர்ந்து சென்றேன். ஐயருக்கு அறுபது வயதிற்கு மேலிருக்கும். மாநிறமான பேர்வழி. தலை முழுவதும் வெள்ளிக்கம்பி. எங்களைப் பார்த்தவுடன் படுத்திருந்தவர் எழுந்து உட்கார்ந்தார். ஒரு சிட்டிகை பொடியை ரொம்ப அனுபவபாவமாக சம்பூர்ண வேகத்தோடு மூக்கிற்குள் உறிஞ்சி உத்தரீயத்தால் துடைத்துக்கொண்டு கண்களைத் திறந்தார். அவர் கண்கள் பளிச்சென்று தெரிந்தன. அக் கண்களால் அவர் எங்களைக் கூர்ந்து பார்த்து,

"இந்த ஊர் என்னான்னு எதிலே சேர்த்தி? டவுனுமில்லே. கிராமமுமில்லே. இரண்டாங் கெட்டான். உங்களைப் பார்த்தால், நத்தப்பள்ளம் சித்த வைத்தியசாலைக்கு வந்தவாபோலத் தெரிகிறதே, அப்படித்தானா?" என்றார்.

"ஆமாம்" என்றார் பண்டிதர்.

"கேட்டாக் கேளுங்கோ, விட்டா விடுங்கோ, டாக்டர்—எஸ். வைத்தியலிங்கம் செட்டியார் உண்டோன்னோ தமிழ் வைத்தியத்திலே பலே பேர்வழி. நாடிப் பரீக்ஷையில் மகாமுண்டன்........" என்று அடுக்கினார் ஐயர்.

"ஆமாம், ஆமாம். அவரைப்பற்றி அப்படித்தான் பிரஸ்தாபம். அவரைத் தேடி வந்தது வாஸ்தவந்தான். அதிருக்கட்டும், அப்புறம் பேசுவோம். ஏதோ மனுநீதி கண்ட சோழன் என்றீர்களே, அவனுக்கும், இந்தக் கோவிலுக்கும் என்ன சம்பந்தம்?" என்றேன் நான்.

ஐயர், 'ஹக்கக்கே' என்று தொண்டையில் தங்கியிருந்த கோழையை நீக்க ஒரு கனைப்புக் கனைத்தார். பிறகு, எக்கிலிருந்த பொடிமட்டையை இடது கையால் தடவிக்கொண்டே,

"அப்பா! இதற்குள்ளவே வெய்யில் இப்படி படை படைக்கிறதே! சித்திரை வைகாசி எப்படிப் போகப் போகிறதோ!' என்றார்.

"ஏன் பங்குனியிலேயே கோடை ஆரம்பந்தானே" என்று நான் சொல்லும்பொழுது, 'ஐயரே வீண் அளப்பு வேண்டாம். விஷயத்தை ஆரம்பியும்' என்ற தொனியை, அவ் வார்த்தைகளிலேயே வெளிப்படுத்தினேன்.

ஐயர் கனைத்துக்கொண்டு மனுநீதிகண்ட சோழனுக்கும், திருவிடை மருதூர் ஆலயத்திற்கும் உள்ள சம்பந்தத்தை வெகு சுவாரஸ்யமாகச் சொல்லி முடித்தார். அவர் சொல்லியதின் சுருக்கம் பின்வருமாறு:—

"கும்பகோணத்துக் கருகாமையில் சைவசமயாசாரியார் நால்வர்களாலும் பாடப்பெற்ற திருவிடை மருதூர் என்னும் ஊர் இருக்கின்றது.

நடுக்க முற்றதோர் மூப்பு வந்தெய்தி
நமன்றமர் நரகத்திலிட லஞ்சி

இடுக்கணுற்ற னுய்வகை யருளாய்
இடை மருதுறை யெந்தைபிரானே.

என்று சுந்திரமூர்த்தியடிகள் பாடி யிருப்பதை நீங்கள் படித்திருப்பீர்கள்; கேட்டிருப்பீர்கள். சுவாமி பெயர் மருதப்பர். அம்பிகை நாமம் நன்முலை நாயகி; விருக்ஷம் மருதமரம்; என்பவை எங்களுக்குத் தெரியாத விஷய மல்ல. ஆனால் சொல்லப்பட்ட இவ்வளவு தன்மையோடும் மகிமை வாய்ந்த கிராமம் இது; என்பது உங்களுக்குத் தெரிந்திருக்காது. இந்தக் கிராமத் தின் பெயரும் திருவிடை மருதூர்தான். இந்தத் திருவிடை மருதூர் திரு வாரூருக்கு தென்கிழக்காகவும், வில்வாரண்யம் என்று பெருமை சொல்லப்படு கின்ற திருத்தருப்பூண்டிக்கு வடகிழக்காகவும் அமைந்திருக்கிற விஷயம் வெட்ட வெளிச்சம். திருவிடை மருதூரைப்போலவே மற்றொரு திரு விடை மருதூரை ஸ்தாபிக்க வேண்டிய அவசியமென்ன வந்தது? இந்தக் கேள்வி தோன்றும் பொழுதுதான் மனுநீதிகண்ட சோழனின் பக்தி வெள் ளத்தையும் நாம் ஆராயும்படியா யிருக்கிறது.

"இந்தப் போலித் திருவிடை மருதூருக்கு மிகச் சமீபத்தில் மனுகண்டம் என்று ஓர் ஊர் இன்றும் இருக்கிறது. அவ்வூர்தான் மனுநீதிகண்ட சோழ னின் தலைநகரம் என்கிறார்கள். ஊரின் அமைப்பும் அதற்கு ருசுவாக இருக் கிறது. ஆறில் ஒருபங்கு நிலவரி யென்பதுபோலவே, அக் காலத்தில் ஆல யங்களுக்கு ஆறுகால பூஜையும் நடைபெற்று வந்தது. இக்காலத்திலும் பெரிய ஆலயங்களில் அவ்வாறே நடைபெற்று வருவது தெரிந்த விஷயமே. அக் காலங்களில் ஆகக்கடைசி 'அர்த்தசாமம்'. அந்த அர்த்தசாம கால தரி சனத்திற்காக, மனுகண்டத்திலிருந்து அனுதினமும் திருவிடை மருதூர் சென்று வந்தான் மனுநீதிகண்டன். அக்கால பூசையை தரிசியாது அவன் உண்பதும் உறங்குவதும் இல்லையாம். அவ்வாறு அவன் அவ்வொழுக்கத் தைக் கடைப்பிடித்து வருங்காலத்தில் ஒருநாள், பேரிடியும் பெருமழையும் வந்து பெய்து, அரசனை திருவிடைமருதூர் செல்ல ஒட்டாது தடுத்தன. அர சனது பல்லக்கைச் சுமந்த போகிகள் மேற்படி அசந்தர்ப்பத்தால், வழியை விட்டு வழியிற் சென்று தடுமாறினர். திக்குங் கெட்டு திசையுங் கெட்டு மலைத்து நின்றபொழுது, சோழன் சிவபெருமானின் அர்த்தசாம தரிச னத்தை இழக்கின்றோமே என்று வெகுவாக உருகி மனங்கரைந்து வருந்தி னான். சிவபெருமான் சோழனின் துன்பத்தைச் சகியாதவராய் சகள வடி வத்தோடு தோன்றி 'அன்பா வருந்தாதே. அர்த்தசாம தரிசனத்தை உனக்கு அளித்தோம். இனிமேல் நீ திருவிடை மருதூருக்கு தினந்தோறும் வர வேண்டியதில்லை. இவ்வூரே உனக்குத் திருவிடைமருதூர். இந்தத் தலத் திலேயே நாம் உமக்கு அனுதினமும் காக்ஷி தருகின்றோம்' என்று திருவாய் மலர்ந்து மறைந்தருளினாராம்.

"அரசன் முதலானோர் மெய்சிலிர்த்து தம்மை மறந்து சிவபெருமானைச் சேவித்து மனமகிழ்ந்தனர். மறுநாள் அவ் விடத்திலேயே அரசன் கோயி லைக் கட்டுவித்தான். அந்தக் கோயில்தான் இது, மனுநீதிகண்டனுக்கென்றே இங்குச் சிவபெருமான் கோயில் கொண்டெழுந்தருளினார். ஆதலின், அவ னுடைய சிலையையும் இங்குப் பிரதிட்டை செய்திருக்கின்றது."

மேற்கண்ட விஷயத்தைக் கேட்டு நாங்கள் மகிழ்ந்தோம். பூர்வீக தமிழ் உலகத்தின் ராஜீய தேசிய சமூக வாழ்வின் பரிசுத்தமான நிலையை எங்கள் இருவர் மனமும் கண்டு, ஆனந்தித்தன. நாங்கள் பார்வையிட்டும் வினவியும் தெரிந்துகொண்ட விஷயம் வருமாறு:—

கோயில் மகாபெரியது ஒன்றுமில்லை. சாதாரணமானதுதான். ஆனால், ஆகப் பழங்காலத்திற் கட்டப்பட்ட தென்பதில் ஐயமில்லை. மூன்று நான்கு முறை புதுப்பித்துக் கும்பாபிஷேகம் செய்யப்பட்டதாகச் சொல்லப்படு கிறது. அதனுடைய கடைசி கும்பாபிஷேகம் சுமார் இருநூறு வருடங்க ளுக்கு முன்னாலிருந் திருக்கவேண்டும். சென்ற பவ தைமாதத்தில், மூலைக்கு மூலை கிடந்த சில கல்விக்கிரகங்களை யெல்லாம் பிரதிட்டை செய்து, அஷ்ட பந்தன மண்டலாபிஷேகம் ஒன்று நடந்தது. பிரகாரச் சுவர் முழுவதும் இடிந்து கிடக்கிறது. கற்களைக் கூடக் காணோம். கோயிலின் மொத்த பரப்பு சுமார் 150 சதுர அடிகளிருக்கும். தலைக்கோபுரமில்லை. அம்பாள், சுவாமி, ஸ்தூபியோடு சரி. வழக்கம்போல் சுவாமி கிழக்குமுகமாகவும், அம் பிகை தெற்கு முகமாகவுமே அமைக்கப்பட்டிருக்கிறது. நந்தி, பலிபீடம், வெய்யிலிலும் மழையிலும் காய்ந்து நனைந்துதான் ஆகவேண்டும். மனுநீதி கண்ட சோழவிக்கிரகம் நந்திக்கு முன்னாலிருக்கிறது. அதற்கு மாத்திரம் ஒரு கீற்றுக் கொட்டகை போடப்பட்டிருக்கிறது. கோயிலுக்கு அசாத்தியநிலம் மானியம் விடப்பட்டிருந்ததாம். நாளடைவில் ஆசாமிகள் அவைகளை அனு பவிக்கத் தொடங்கி விட்டதாகத் தெரிகிறது. இப்போதிருப்பது பத்துமா நிலந்தான். வெண்கல விக்கிரகங்கள் சில இருக்கின்றன. பதினெட்டாம் நூற்றாண்டில் வார்க்கப்பட்ட நடராஜ வெண்கல விக்கிரகத்தில் மூன்றிருந்த தற்கு, விற்றுப்போனது ஒன்று, திருக்கிளர் தேவாலயத்திற்குக் கொடுத்தது ஒன்று, ஆக இரண்டுபோக இப்பொழுது இருப்பது ஒன்றுதான். ‘கல் வெட்டு’ ஏதேனும் இருக்கலாம் என்று எண்ணித் தேடினோம்; புலப்பட வில்லை. யாரோ ஒருவர் இத் தலத்திற்குப் புராணம் எழுதி யிருக்கிறதாகச் சொல்கிறார்கள். நான்கு வீதி யழகா யிருக்கிறது. தேரில்லை. தீர்த்த மிருக் கின்றது. ஒருகால பூஜை நடந்து வருகிறது.





# சாங்கிய தரிசனம்

(திரு. எஸ். ஏ. திருமலைக் கொழுந்துப் பிள்ளை, பி.ஏ.)

## 71-வது காரிகை

*விஷ்யப்பரம்பர யாகத மீஸ்வர கிருஷ்ணேன சைததார்யாபி:—*
*சம்க்ஷிப்தமார்ய மதிஞசம்யக் விக்ஞாய சித்தாந்தம்.*

*மாணக்கர்கட்கு கர்ண பரம்பரையாக வந்து கொண்டிருந்த இவ் ஞானத்தை ஈசுவரக் கிருபை பெற்று, அதனை நன்காராய்ந்து சரியான முடிவைக் கண்டு, ஆரிய மதிவாய்ந்த அத்தக்திரி அத்தந்திரத்தை ஆரியப் பாவால் மிகச் சுருங்கிய காரிகை ரூபமாய் வெளிப்படுத்தினன்.*

*உரை ஆரிய மதி யென்பது பேரறிவைக் குறிக்கு மென்ப.*

*ஆயினும் வட சொல்லின் இரகசியத்தை யுணர்ந்த அறி என்று பொருள் கோடல் சால்புடைத்து. வட சொல்லது தந்திரம் கைவரின் அதுவும் முத்திக்கு வழி யென்பதனைத் திருமூலர் விளங்க வுரைத்தா ரன்றே!*

## 72-வது காரிகை

*சத்பத்யாம் கில யேர்த்தாஸ்த் தேர்த்தா: கிருத்ஸ்*
*நஸ்யஷஷ்டி தந்த்ரஸ்ய—ஆக்யாயிகாவிர*
*ஹிதா: பரவாதவி வர்ஜ்ஜிதாஸ் ரவாபி*

*இந் நூற்கண் எழுபது ஈரடிப்பாக்களால் விளக்கம் பெற்ற விஷயங்கள் சாங்கிய ஞான முழுமையையும் அடக்கும.*

*உதாரண சரிதங்களும், பரவாதமும் இவண் கூறப்பட்டில. மேலவை நீங்கலாக இவண் ஆராயப்பட்ட விஷயங்கள் அறுபது.*

*உரை. அறுபது விஷயங்கள் யாவையெனின்:—*

1. *புருஷனுண்மை.*
2. *பிரகிருதியுண்மை.*

3 பிரகிருதியது ஏகத்தன்மை.
4. பிரகிருதி விஷையிகரிக்கப்படுந் தன்மை.
5. பிரகிருதி ஏற்பட்டது (புருஷன் பொருட்டு.)

6. புருஷர் பலர்.
7. புருஷன் பிரத்தேகம்.
8. புருஷன் அசைவிலான்.

9. சூக்குமமாகிய இலிங்கம் அழியாமை.
10. தூலதேகம் அழிவது.

11. அவித்தை.
12. அஸ்மிதை.
13. அராகம்.
14. துவேஷம்.
15. அபிநிவேஷம்.
} பஞ்சக்கிலேசம்.

16. பிரகிருதியைப் பற்றிய ஆத்திரம்.
17. உபதானத்தை ,, ,,
18. காலத்தை ,, ,,
19. பாக்கியத்தை ,, ,,
} இவை புத்தியின் உட்கேடு (உண்ணோக்கிய கேடு)

20. சப்தத்தைப்பற்றியறிய ஆத்திரம்.
21 பரிசத்தைப் ,, ,,
22. ரூபததைப் ,, ,,
23. இரசத்தைப் ,, ,,
24. கந்தத்தைப் ,, ,,
} இவை புத்தியின் வெளிக்கேடு (வெளிநோக்கிய கேடு.)

25. ஊகக் குறைவு.
26. கேள்விக் குறைவு.
27. கல்விக்குறைவு.
28. தன வேதனையை யாளாமை.
29. தெய்வ வேதனையை யாளாமை.
30. பூத வேதனையை யாளாமை.
31. அளவளாதற்குறை.
32. ஈகை (தூய்மைக்) குறை.
} இவை புத்தி, சித்தி பெறும் திறத்தில் நேரும் குறைவாம்.

33. மனக்கேடு (பைத்தியம்.)
34. தோற்கேடு (குஷ்டம்.)
35. செவிட்டுத்தனம்.
36. குருட்டுத்தனம்.
37. அன்ன துவேஷம்.
38. மூக்கடைப்பு.
} இவை ஞானேந்திரியங்களின்பால் வரவல்ல இடையூறுகள்.

39. ஊமைத்தனம்.
40. நொண்டித்தனம்.
41. கைமுடக்கம்.
42. மலச்சிக்கல்.
43. வீரியக்குறை.

} இவை கன்மேந்திரியங்களின்பால் வரவல்ல இடையூறுகள்.

44. பிரகிருதியை நோக்கி வாளாவிருத்தல்.
45. உபதானத்தை (துறவை) ,,
46. காலத்தை நோக்கி ,,
47. பாக்கியத்தை நோக்கி ,,

} இவை உள் ஆலசியம்.

48. சப்தத்தை விட்டு வாளாவிருத்தல்.
49. உணர்ச்சியை விட்டு ,,
50. ரூபத்தை விட்டு ,,
51. இரசத்தை விட்டு ,,
52. கந்தத்தை விட்டு. ,,

} இவை வெளி ஆலசியம்.

53. ஊகம்.
54. கேள்வி.
55. கல்வி.
56. } முக்கூற்றுத்
57. } துன்பத்தையும்
58. } ஒழித்தல்.
59. அளவளாதல்
60. தானம் (தூய்மை.)

} இவை எட்டும் சித்திகள்.

உதாரண சரிதங்கள்:—சாங்கிய தரிசனத்துள் நான்காம் காண்டத்துட் கூறப்பட்டுள்ளன. அவை தொகையால் 32.

1. இராஜ புத்திரன்போல் தத்துவ உபதேச வாயிலாக.

ஓர் அரசனது ஆண் குழந்தை சில வேடர்களால் திருடப்பட்டு அவர்களால் வளர்க்கப்பட்டு வாலிப வயதை (பிராயத்தை) யடைந்தது. உள்ளீடு கண்டவன் அவ் வாலிபனுக்கு அவனது அரசப் பிறப்பை யுணர்த்தலும், அவனுக்கு நினைவு வந்து ஆமென உடனே அரசனது அரண்மனையை யடைந்து தகப்பனைக் கண்டு மேல் வாழ்வு பெற்றான். ஐம்புல வேடர்களுட் சிக்குண்டு தனது நிலையை மறந்த சிற்றுயிர் தனது மெய்ந் நிலையைத் தூண்டியுள்ளவா காட்டவல்ல ஆசிரியனால் விடுதலை பெறும்.

2. ஒரு பொருளைக் காட்ட மற்றோர் பொருளை யுபதேசிப்பது; பிசாசைப் போல் (Hinting by Probables)

இஃது தந்திரமாய் மோக்ஷ வழி காட்டல், கதையைக் கண்டு பிடிக்க.

3. அடிக்கடி யுபதேசஞ் செய்வதால் திடமான மெய்ப்பொரு ளுதயமாகும்.

கல்லைத் தட்டிக் கொண்டிருப்பின் குபீரெனத் தீப்பொரியானது ஓர் கணத்தி லுண்டாகின்ற தன்றே!

4. தகப்பனும் பிள்ளையும் போலிருவரும் தரிசனஞ் செய்வதால் ஞான முதயமாகும்.

நெடுங்கால தகப்பனும் பிள்ளையும் பிரிந்திருந்து அகஸ்மாத்தாய்ச் சந்திக்க நேரின், எவ்வாற்றானோ பரஸ்பரம் இருவரும் நன்கிழுக்கப்பட்டுத் தமது சம்பவத்தை யுணர்வர்.

துஷ்யந்தனும் பரதனும் தமது சம்பந்தத்தை யுணர்ந்தா ரன்றே!

5. சேனம் (இராஜாளி) தானே கொடுத்தால் துன்புறாமற் கொடுக்கின்றது; வலுவிற் பிடுங்கின் துன்புறுகின்றது.

6. பாம்பு (அஹிஹி) தனது சட்டையை (நிர்வயனத்தை=நெய்யாத வஸ்திரத்தை)க் களைந்து பரிசுத்த மாவதுபோல்.

தேக இந்திரிய அசுத்தங்களைவிட்டு ஞானி தன்னைப் பரிசுத்தனாக்கிக் கொள்வன்.

7. துண்டிக்கப்பட்ட கைபோல்.

கை துண்டிக்கப்படின் முன்னர் அதன்பாலுள்ள பற்று எவ்வாறு முழுமூற்றும் நசிக்கின்றதோ, அவ்வாறு தத்துவங்களை நியதி களைந்து, அவற்றின்பால் பற்றவேண்டும் என்பதாம். கக்கி வெளிவந்த சோற்றின்பால் வேட்கை யறுதல்போல் எனவுங் கொள்க. *

8. முக்திக்கு ஏதுவல்லாப் பொருளை நாடின் பந்தமுளதாம்; பரதன் போல்.

இஃதெல்லாம் துறந்த ஜடபரதர் ஓர் மான்பாற் கொண்ட பரிவால், தானும் மான்பிறவி பிறக்க நேர்ந்ததைச் சுட்டியது.

9. குமரி சங்கத்தால் மனம் வேறுபடுவள்; கிருத்தியம் செவ்வையாய் நடவாது.

வெறுங் கையாய் இந்தக் குமரிக்கு வளையல் அணியின், அவள் வீட்டுப் பணிவிடையை முடிக்க மனமெழாது விளையலையே திருப்பித் திருப்பிக் கையழகையே நோக்கி நிற்பள். அதுபோல் புத்தி புதிதான வொன்றைப் பற்றி வேட்கை கொள்ளின், முன் பற்றி யிருந்த நற்பொருள் நாட்டம் குன்றும்.

10. இரண்டுகூட விருப்பதுங் கேடு. ஒன்றே கூட விருப்பின் நலமாம். இரண்டிருப்பின் மனஞ்சிதறும்.

11. பற்றில்லாதவன் சுகியாதவன், பிங்களைபோல. கதையைத் தேடிக் காண்க.

12. வேறு வீட்டில் ஆரம்பஞ் செய்யாதிருந்த போதிலும் சுகியாவான்; பாம்பைப்போல்.

13. அநேக சாத்திரங்களை பற்பல ஆசிரியர்களை வழிபடினும், பிரம்மரம் (அறுபதம் வண்டு) போல சாரத்தையே கவனித் தெடுத்துக் கொள்க.

"அருடருங் கேள்வி யமையத் தேக்க
பற்பல வாசான் பாங்கு செல்பவர்போல்
மூன்றுவகை யடுத்த தேன்றரு கொழுமலர்
கொழுதிப் பாடும் குணச்சுரும் பினங்காள்."

என்றனர் கல்லாடர்.

14. பாணத்தை (அம்பை)க் கூர்மை செய்வான் மனம் அதன்கண் பதிந்திருப்பதுபோல், சித்தம் நிலைபெறின் நன்மை.

இவன் வழியே போவாரை நோக்க நேரினும், அவர்பாற் கவனஞ் செல்லாது.

15. கிருதநியம லங்கனத்தால் அனர்த்தம் சம்பவிக்கும், லோகம் போல்.

இலௌகிக விஷயங்களில் செய்ய வேண்டியவற்றைச் செய்யாதிருப்பின் நன்மை கிடையாததுபோல், ஆதியி லேற்பட்ட ஒழுக்கத்தை (ஏற்பாட்டை)க் கைதவறின் கோரிய முடிவு கிட்டாது. (அசதியில் நஷ்டம் உண்டாகும்.)

16. அதனை மறந்தாலும் அனர்த்தம் (நஷ்டம்) சம்பவிக்கும்; தவளையைப்போல்.

ஓர் அரசன் ஓர் வனத்தில் அதியற்புதமான கன்னிகையைக் கண்டு அவளை மணந்து கொள்கையில் அவள் "எனக்கு நீர் தண்ணீரைக் காட்டாத வரை உம்மிடம் வாழ்வேன்" என்றனள். அவ்வாறே சிறிது காலம் அவரோடு போகந் துய்க்கையில் ஓர்நாள் அவள் விளையாட்டாற் களைப்படைந்து பருக நீர் கேட்டாள். மறதியால் நியமந்தவறி தண்ணீர் அவள் அருகே வரலும் அவள் தவளையாகி அவண் ஓர் தடாகத்துட் புகுந்து கொண்டாள். வலை போட்டுப் பார்த்தும் அவ்வரசனுக்கு அவள் திரும்பக் கிட்டாளாயினள்.

17. உபதேசத்தைச் சிரவணஞ் செய்யினும், ஆலோசனை யில்லாமற் போனால் கிருதகிருத்தியம் (நற்பயன்) கிட்டாது; விரோசனனைப்போல். சாந்தோக்கிய உபநிடதம் 8-ம் காண்டத்திற் காண்க.

18. அவ் விருவருள் இந்திரனு லறியப்பட்டது.

16. பிரணதி, பிரம்மச்சரியம், உபசர்ப்பனம் (அடுத்து நிற்றல்) ஆகிய மூன்றாலும் கிருதகிருத்தியங் கிட்டும்; இந்திரனைப்போல்.

20. கால நியமனமில்லை, வாமதேவரைப்போல்.

21. பரம்பரையாய் அத்யாப்த ரூபத்தை உபாசிப்பதால் சித்தி யுண்டாகும்; யாகத்திற் பத்தி செய்கிறவர்களைப்போல்.

22. ஜன்ம சுருதிக்கு பஞ்சாக்கினியின் சேர்க்கையால் ஆவிர்த்தி யேற்பட்டதுபோல, மற்றொன்றின் லாபம் ஏற்பட்டிருப்பினும் ஆவிர்த்தி யுண்டு.

23. விரக்தன் விடக்கூடியதை விடுதலும் கொள்ளவேண்டியதை அங்கீகரிப்பதும் அன்னப்புள்ளும் பாலும்போல்.

அன்னம் பாலிலுள்ள சத்தை மாத்திரம் உட்கொண்டு நீரைத்தொடாது விட்டுவிடு மன்றோ !

24. அதிசயங்களை யுடையவனது சேர்க்கையாலும் (ஞானம்) உண்டாகும்.

அதிசயங்களைக் கண்டோன் ஞானமில்லா னாயினும் அவற்றை யவன் பாற் கேட்டும் தந்திர ஞானியாவன்.

25. அராகத்தா லடியுண்ணும் பக்ஷத்தில் இஷ்டப்படி சஞ்சரித்தல் கைகூடாது (காமசரித்துவம் கிட்டாது.)

(ஆசை துறந்தவன் இஷ்டானுசாரமாய்த் திரிதல் கூடும்) சுகம்போல்.

26. குணங்களோடு கூடுவதால் பந்தமுறுவன்: சுகம்போல்.

27. போகத்தால் ராகம் (ஆசை) தொலையாது ! முனியைப்போல்.

28. இருவர் மாட்டும் தோஷத்தைக் கண்டிருப்பதனாலே.

29. களங்கமான சித்தத்தையுடையவ னிடத்தில் உபதேசமாகிய பீஜம் (வித்து) அங்குரிக்காது: அஜனைப்போல்.

30. ஆபாசம் (சொற்பத்தெளிவு அல்லது பிரகாசம்) மட்டும் உதவாது: அழுக்கடைந்த கண்ணாடியைப்போல். அழுக்கடைந்த கண்ணாடி நன்றாய்த் துலக்கினன்றி முகத்தைத் தெளிவுறக் காட்டாது.

31. அதிலிருந்து உண்டாயினும் அதன் ரூபத்தை வகிப்பது கிடையாது: தாமரைபோல்.

32. விபூதி கூடினும் கிருதகிருத்தியம் (நற்பயன்) கிட்டாது, கிட்டாது. உபாசசித்தியைப்போல்.

முற்றிற்று.



# நூல் நிலயப் பிரசாரம்

(எஸ். ரங்க கவுடர்.)

மக்கட்குக் கண் போன்றது கல்வி யென்பது நமது நாட்டுப் பெரியோர்கள் கொண்டுள்ள கருத்து. இது மிக அழகியதோர் உவமையாகும். உயிரினங்கட் கெல்லாம் கண் இன்றியமையாத உறுப்பு, ஒருவனுக்கு கண் இல்லையேல் அவனுக்கு நலங்க ளெல்லாம் பயன் படாது ஒழிகின்றன. அவன் வானத்தில் ஒளிப் பிழம்பாய்த் திகழும் சூரியனை அறிய மாட்டான்; இரவில் நக்ஷத்திரங்கள் புடை சூழவான வீதியில் உலவி நின்று ஒளியைக் கக்கும் சந்திரனையும் அறியான. பூமியை ஓரான். மலைகளை யுணரான் தன்னுடன் பயிலும் மககளையும் அறியான். சுருங்கச் சொல்லின் அவனுக்கு உலக வாழ்வு என்பதே இல்லையா யொழிகின்றது. இவ்வாறாக மக்கள் உயிர் வாழ்வதற்கு இன்றி யமையாத பெருஞ் சிறப்பினதா யுள்ளது கல்வி என்பது ஒப்ப முடிந்ததே.

ஆனால் எம் முறையில் மக்களைக் கல்வி பயிற்றுவித்தல் வேண்டு மென்பது மிக பூர்வ காலந் தொட்டு இன்று வரை ஆராய்ச்சிக் கிடமாய் நின்று வருகின்றது.

ஆதிகாலத்தில் தமிழ் எழுத்துக்கள் அறிந்ததில்லை. ஆனால் கேள்வியின் மூலமாக அறிவு பரவி வந்தது. நெடுங் காலத்திற்கு பின்பு எழுத்துக்கள் வழங்கப் பெறலாயின. பிறகு வரவர கல்வி கற்க கருவிகள் கை கூடின. கலாசாலைகள் அங்கங்கே நிறுவப் பெற்றன. "கணக்காயர்" என்பது இக் கலாசாலையில் நூலுரைப்போர்க்கு முற்காலத்தில் வழங்கிய பெயர். திருக் கோயில்களில் கலாசாலைகள் அமைக்கப் பெறலாயின. அநேக அரசர்கள் உதவி புரிந்து வந்தனர். கலாசாலையில் கற்றுவந்த மாணவர்களுக்கு "சட்டர்" எனப் பெயர் வழங்கலாயிற்று. பின்பு காலாந்தரத்தில் வெவ்வேறு சமயத்தைச் சார்ந்த துறவிகள் தாங்கள் வசித்து வந்த மடங்களில் கல்வியைப் போற்றி நூல்களைத் தொகுத்து வரலாயினர். அவர்கள் கல்வியின் பொருட்டு செய்து வந்த முயற்சிகள் மிகப் பல.

ஆங்கிலேய வரசு நமது நாட்டில் நிலைபெறத் தொடங்கிய காலந் தொட்டு அரசாங்கத்தினர் தாமே நேரிற் கல்வியைப் போற்றி வருவாராயின ரென்பது கண் கூடு. சர்வகலா சங்கங்கள் நிறுவப் பெற்றன. கல்லூரிகள் பல அமைந்து நின்றன. அரசாங்க உதவியால் கல்வி மேல் மேலும் அதிகரித்தது. இவ்வித ஏற்ற மடைந்ததற்கு அச்சுயந்திரம் நமது நாட்டிற்கு மேனாட்டாரால் கொண்டுவரப் பட்டதே யாகும். இவ்விதமான முயற்சி அரசாங்கத்தினரே நேரில் முயன்ற போதினும் நம்மவர்களில் நூற்றுக்கு 3 பேர் வீதமே எழுத்தறியும் அத்துணை யளவு கல்வி பயின்றுள்ளார்கள். 32 கோடி ஜனங்களுள்ள

# பூங்கிளி

:(o):

(கோட்டாறு-தே. ப. பெருமாள்.)

மதுவதனை அனுதினமும் மறவாது உண்ணுமக்கள்
கதியெய்தி வாழ்வதுண்டோ? கண்டவரு முலகிலுண்டோ?
மிதிசெய்யும் மலர்த்துணரில் மிருமணம் வீசிடவே
இதுவென்ன என்றாயும் இசைக்கிளியே இயம்பிடுவாய்! (1)

குடிமயக்க மெழும்பிடவே கோலத்தொட் டிலில்துயிலும்
வடிவுடைய சிறுகுழவி வானிரவி லெடுத்துப்போய்
துடித்திடவே கொலைசெய்து தூங்கிய சிறுபொன்னை
குடிக்கீயும் கொடியவரும் மகன்தானோ? உரைகிளியே! (2)

பாலோடு பழந்தருவன் பசுஞ்சோலைப் பைங்கிளியே!
மேலோர்கள் தூற்றுமிந்த மேன்மையில் இழிமதுவும்
நேரான மதிபோக்கி நரகிடையே வீழ்த்துதலை
சீரான சொல்கொண்டு செப்பிடுவாய் குடியர்க்கே. (3)

மனஅயர்வும் உடலயர்வும் மற்றும்பல் நோய்களும்
பனைமதுவால் தீருமென்ற பண்டிதரும் பண்டிதரோ?
தினைகொய்யும் தீங்கிளியே! தீமதுவால் தீதன்றி
தினைத்துணையும் நன்மை யிலை தெரிவிப்பாய் அவரிடையே! (4)

---

நம் நாட்டில் நூற்றுக்கு 97 பேர்கள் எழுதவும் வாசிக்கவும் தெரியாத நிரக்ஷர குக்ஷிகளா யிருக்கின்றார்கள். மேனாட்டில் கல்வி யறிவில்லாதவர் நூற்றுக்கு 3 பேரேயாகும். ஆதலால் நூல் நிலயப் பிரசாரம் அவசியம்.

நகரங்களிலும் கிராமங்களிலும் அங்கங்கே யுள்ள மக்களின் தகுதிக்கும் அளவிற்கும் ஏற்றவாறு பல திறப் பட்ட நூல்களையும் தொகுத்துவைத்து வேண்டியோர்க்கு வேண்டுஞ் சமயத்து எளிதினுதவி கல்வி யறிவைப் பரவச் செய்வதே நூல் நிலயப் பிரசாரத்தின் முக்கிய நோக்கமாகும்.

பிறிதொரு நூல் நிலய வகையை இங்கே விசேடித்துக் கூறுதல் அமை வுடைத் தென்று எண்ணுகிறேன். நமது அரிய பெரிய நூல்கள் பெரியோரால் இயற்றப் பெற்றவைகளை பாதுகாக்கப் பெறாது அழிந் தொழிந்து போயின. நமது முன்னோர் நமக் கென்று ஈட்டி வைத்துள்ள பல நூல்களை நாம் போக்கடிக்க வைப்போமானல் தமிழ் மக்கள் என்னும் பெயர்க்குத் தான் நாம் தகுதியுடையவ ராவோமா?

மைவிழி பிறைநுதலார் மலர்ப்பொழிலின் நடுநின்று
கைவழி பந்தாடி காதல்மொழி பேசியதை
மறைவாகச் செவியேற்று மதியுடனே பயில்கிளியே!
நிறையில்லாக் குடியரிடை நீயுரைப்பாய் மதுவொழிக்க. (5)

குடியில்லா வேளையிலே குடியரிடை நீசென்று
படுமதுவின் தீமைகளை பலசொல்லித் தடுத்த பின்னர்
முடிவாக அவரிடையே குடிப்பதில்லை யெனுமொழியை
நெடிதாய ஆணையொடு நீபெறுவாய் பூங்கிளியே! (6)

தேமாவி னிளஇலையை திருத்துணை யெனவெண்ணி
ஏமாநதே பின்னுனை இருந்தழைக்கும் எழிற்கிளியே!
தாமாந்தும் மதுவினையே தகுந்தவுண வென்றெண்ணி
தீமார்க்கம் புகுவோரைத் திருத்துவது முன்கடனே! (7)

செல்வராய் வாழ்ந்தமக்கள் சிறுமதுவை உண்டபின்னர்
புல்லராய் வாழ்வுகொண்டு புலம்பித்தான் திரிவதையே
நல்லதாய்க் கண்டுவிட்டாய்! நயமுடைய பூங்கிளியே!
அல்லலிதைக் கூறிடுவாய்! அவக்குடிகொள் புதியருக்கே! (8)

அன்னையை உதைகொடுத்து அப்பனைப் பலதூற்றி
முன்னைய நண்பரையே முனிவினால் இகழ்ந்துதள்ளி
தன்னையே வெறுத்திடவும் தருமத்தைச் சிதைத்திடவும்
தன்னையே தூண்(டு) மதுவை தள்ளிடவே உரைகிளியே! (9)

தெருவினிலே குடியர்தான் திசைதவறி வந்துவிட்டால்
வருவோரும் போவோரும் வகையிலா சொற்கூறி
இழிவூட்ட இடம்பெறுவார் இவ்வுலகில் மதிப்படையார்
கழிவுகொள்வாய் அவர்தமக்கு கவின்பெற்ற மரகதமே! (10)



# ஆசிரியர் குறிப்புக்கள்

## மானிட சமூகமும் சமய வாழ்வும்

இக்காலத்தில் பொதுவாக உலகிலும் சரி, சிறப்பாக நமது பாரதநாட்டிலும் சரி மதம் அல்லது சமய வாழ்க்கை படிப்படியாகப் பின்னுக்குத் தள்ளப்பட்டுவருகிறது. மக்களில் பெரும்பாலோர் இவ்விகலோகத்தில் சுகமாக வாழ்வதற்கு வழி என்ன என்பதிலேயே கண்ணுங் கருத்துமாய் இருக்கிறார்களே யொழிய, சமயம், கடவுள் உணர்ச்சி முதலிய மனித வாழ்க்கைக்கு மிக இன்றியமையாததான விஷயங்களில் அசிரத்தையும் அலக்ஷியத்தன்மையும் அதிகமாகி வருகிறது. அதற்குக் காரணம் என்ன? கும்பகோணம் கல்லூரி புரொபசரும், வேதாந்த விசாரணையில் சிறந்தவரும், பெரிய அறிஞருமான ஸ்ரீ நாகராஜ சர்மா இத்தகைய நிலைமைக்கு சையன்சும் அரசியலுமே காரணமென்று கூறுகிறார். சயன்ஸ் நேராகவோ, மறைமுகமாகவோ கடவுள் ஒருவர் இருக்கிறார் என்பதை மறுக்கிறதாம். அரசியலோ மிகவும் சாமர்த்தியமாக மதத்தையே நிராகரிக்கிறதாம். சாணக்கியர் காலம் முதலே அரசியல் திட்டங்களில் கடவுளுக்கும் மதத்துக்கும் இடமில்லை யென்றும் ஸ்ரீ. சர்மா கூறுகிறார். ஆனால் மானிட கோடிகள் இவ்வாறே மதம் கடவுள் ஆகிய விஷயங்களில் அசிரத்தையுடன் இருக்கலாமா! ஒருபோதும் கூடாது. ஸ்ரீ. சர்மா, 'மதத்தை என்றைக்காவது ஒருநாள் அதனுடைய யதாஸ்தானத்திற்கு உயர்த்தியேயாக வேண்டும். ஆஸ்திகத்தை மீண்டும் போற்றவேண்டும்' என்றும், 'மதத்தை உன்னத ஸ்தானத்திற்குக் கொண்டுவந்து உலகத்தையும் மனிதர்களையும் ஆட்டிவைப்பது கடவுளே என்னும் உண்மை உணரப்பட்டால் பேராசை, பயம் முதலியவை மறைந்துவிடும்' என்றும் கூறுகிறார். இது முக்காலும் உண்மை. மதத்தையும் கடவுள் உணர்ச்சியையும் புறக்கணிப்பது தவறு. இந்தியர்களாகிய நாமும் இவ்விஷயத்தில் எப்படி நடந்துகொள்ளுகிறோமோ அதையே நமது எதிர்கால கதி பொறுத்திருக்கிறது. இந்தியா மட்டுமல்ல; உலகம் முழுதுமே மதத்தைப் போற்றியாக வேண்டும். ஸ்ரீ. நாகராஜ சர்மா, 'மதத்தை அதற்குரித்தான நிலைமைக்கு உயர்த்தினுலொழிய அரசியல் பொருளாதார வழிகளில் எவ்வளவு முன்னேற்ற மேற்பட்டாலும் மனித சமூகம் சந்தோஷம், சமாதானம், சந்துஷ்டி இவற்றை அடையமுடியாது' என்று கூறியிருப்பதை எவர்தான் மறுக்க முடியும்!

---

## மதங்களும் தேசீய ஒற்றுமையும்

உலகத்தில் எத்தனையோ மதங்கள் இருக்கின்றன. எல்லா மதங்களும் முக்கியமானவைகளே. அவரவர் மதம் அவரவர்களுக்குப் பெரிது. எந்த மதத்தில் ஒருவர் பிறக்கிறாரோ அந்த மதத்தின் மூலமே அவர் மோக்ஷ சாதனத்தை யடையமுடியும். ஒருவர் எக்காரணத்தைக் கொண்டும் மதம் மாற வேண்டிய அவசியமில்லை. ஆயினும் பரஸ்பரம் பலரும் பல மதங்களின் உண்மைகளையும் அறிந்துகொண்டு ஒருவரோ டொருவர் ஒற்றுமையுடனும்

சகோதர பாவத்துடனும் இருக்கலாம். எந்த ஒரு மதமும் இதா மதத்தினரை வெறுக்கவேண்டுமென்றோ, தாக்கவேண்டுமென்றோ கூறவில்லை. ஏனெனின், எல்லா மதங்களுக்கும், ஏன், இந்த உலகம் முழுமைக்குமே கர்த்தாவாக இருப்பவன் ஒரே ஒரு ஆண்டவன்தான். யார் எப்பெயரை இட்டு அழைத்தாலும் அது அந்த ஒரு கடவுளைத்தான் சாரும். எப்படிக் கடவுள் பலவித புஷ்பங்களை இயற்றியிருக்கிறாரோ அவ்வாறே பல மதங்களையும் தோற்றுவித்திருக்கிறார். ஏதேனும் ஒரு புஷ்பத்தை எடுத்துக்கொண்டு மற்ற புஷ்பங்களை நாம் நாசப்படுத்திவிடாமல் அவரவர் அவரவர்க்கு இஷ்டமான புஷ்பத்தைப் பறித்துக் கொள்வதுபோல் அவரவரும் தங்களுக்கு இஷ்டமான மதத்தை அனுஷ்டிக்கலாம். பல ரகங்களையும் வாசனைகளையும் உடைய பல மலர்கள் ஒன்று சேர்ந்து எப்படி ஒரு அழகான மலர் மாலையாக விளங்குகிறதோ அதுபோல இந்தியாவிலுள்ள பல மதத்தினரும் ஒற்றுமையாக இருந்து இந்தியாவே ஒரு சிறப்பான மலர் மாலைபோல் விளங்கும்படி செய்யலாம். ஒருவரோடு ஒருவர் போரிட வேண்டியதில்லை. யாரோ சில சுயவர்கள் தங்கள் சுயநலம் காரணமாக வகுப்புச் சச்சரவுகளைக் கிளப்பிவிடுகின்றனரே யொழிய இத்தகைய சச்சரவுகள் எந்த மதத்துக்கும் பெருமையைத் தருவனவல்ல. சமீபத்தில் நபிகள் நாயக மவர்களின் பிறப்பு தினவிழா கொண்டாடப்பட்டபோது இந்தியாவில் எங்கும் ஹிந்து-முஸ்லிம்கள் கலந்துகொண்டனர். சென்னை திலகர் கட்டத்தில் அன்று ஆற்காடு நவாப் அவர்கள் தலைமையில் கூடிய மாபெரும் கூட்டத்தில் காங்கிரஸ் கட்சித்தலைவரான ஸ்ரீ. ஸி. ராஜகோபாலாசாரியார் பிரசங்கம் செய்தபோது மேலே கூறியுள்ள உண்மைகளை மிக அழகாக விளக்கிக் கூறினார். ஆனால் அந்தக் கூட்டத்திலேயே கடைசியில் குழப்பம் ஏற்பட்டு ஒரு ஹிந்து வாலிபன் குத்திக் கொல்லப்பட்டதானது மிகவும் வருந்தத்தக்க விஷயமாகும். இதற்காக முஸ்லிம் பெரியார்களே வருத்தப்படுவார்களென்பதில் சந்தேகமில்லை. ஆயினும் இத்தகைய அசம்பாவிதத்திற்குக் காரணம், அதற்கு முன் சில தினங்களாகவே சென்னையின் ஒரு மூலையில் உபாயமாக வகுப்புச் சச்சரவு நடந்துவந்ததுதான். அந்த சச்சரவை முளையிலேயே கிள்ளி எறிந்திருக்கவேண்டும். சிறிது அலக்ஷியமாக இருந்துவிட்டபடியால் பின்னரும் பல குற்றமற்றவர்கள் உயிர் துறக்கவும் அடிபடவும் நேரிட்டது. அக்கிரமம் செய்கிறவர்கள் யாராயினும் தண்டிக்கப்படத்தக்கவர்களே. ஆகவே குற்றம் செய்வோர் யாராயினும் சமூக அபிமானத்தை நுழைக்காமல் இரு சமூகத்தினரும் அமைதியை நிலை நாட்டும் எண்ணத்துடன் குற்றவாளிகளைப் போலீசாரிடம் ஒப்படைத்துவிட்டால் சச்சரவுகள் சீக்கிரம் ஒழிந்துவிடும். அதைவிட்டு, காலிகள் ஒருவருக்கொருவர் போட்டுக்கொள்ளும் சண்டையையெல்லாம் வகுப்புச் சச்சரவு என்னும் பெயர் கொடுத்து, இரு திறத்தாரும் பெருங் கலகம் விளைப்பது கொள்ளை, கொலை முதலிய சேதங்களை விலை கொடுத்து வாங்குவதாகும். இந்தியாவின் இன்றைய நிலைமையில் சமூக ஒற்றுமை மிக அவசியமாகும் என்பதை வற்புறுத்த விரும்புகிறோம்.

---

## கொத்தபட்டணம் சம்பவம்

ஆந்திர மாகாணத்திலுள்ள காங்கிரஸ் சமதர்மிகளும், இளைஞர் சங்கத்தாரும் சேர்ந்து அம்மாகாண வாலிபர்களுக்கு அரசியல் பொருளாதார சாஸ்திரங்களில் நிபுணத்வம் ஏற்படும்படி கொத்தபட்டணம் என்னுமிடத்தில் அரசியல் பொருளாதார பாடசாலை ஒன்றை ஏற்படுத்தினார்கள். பொறுப்புள்ள தலைவர்களே அப்பாடசாலையை நிர்வகித்து வருவதென்று தீர்மானிக்கப்பட்டது. ஆனால் அரசாங்கத்தார் இது சட்ட விரோதமான ஸ்தாபனமென்று பகிரங்கப்படுத்தி அதைக் கலைத்துவிடும்படி கட்டளையிட்டனர். அதன் நிர்வாகிகள் பொதுவுடைமைத் தத்துவங்களையுடையவர்களென்றும், தேசத்தின் அமைதியான வாழ்க்கைக்கு அவர்கள் பங்கம் விளைவிப்பார்களென்றும் சர்க்கார் கருதியதால் அவ்வாறு தடை உத்தரவு போட்டனராம். ஆனால் அது அநியாயமான உத்தரவென்று நிர்வாகிகள் கருதியதால் அதை மீறிச் சிலர் சத்தியாக்கிரகம் செய்தனர். போலீசார் பலரைக் கைது செய்ததுடன் சிலரைத் தடிகொண்டு தாக்கியும் கூட்டத்தைக் கலைத்திருக்கின்றனர். போலீசார் தடியடிப் பிரயோகம் செய்யவில்லை யென்று அரசாங்க சார்பில் கூறப்படுவதை விரைவில் ஒப்புக்கொண்டு விடுவது சாத்தியமில்லை. இப்போது அப்பாடசாலை சார்பாக சிலரால் ஹைகோர்ட்டில் வழக்கு தொடரப்பட்டிருப்பதால் நாம் எத்தகைய அபிப்பிராயமும் கூற முன்வரவில்லை யென்றாலும் இந்த சம்பவத்தைப் பற்றி விசாரணை செய்ய உத்தியோகப் பற்றற்ற ஒரு கமிட்டியை நியமிப்பது நலம் என்பதைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறோம். சர்க்கார் கூறிய காரணம் சரியா என்பதை ருஜுப்படுத்தவேண்டியது சர்க்கார் கடமையன்றோ? அக்காரணம் சரியானதல்ல வென்று சம்பந்தப்பட்ட தலைவர்கள் பலரும் அறிக்கைகள் வெளியிட்டிருக்கின்றனர். மகாஜனங்கள் உண்மையை அறியவேண்டாமா?

---

## தொழில் சச்சரவுகளைத் தீர்க்க வழி

இந்தியாவிலும் சரி, மற்ற இடங்களிலும் சரி அடிக்கடி முதலாளிகளுக்கும் தொழிலாளர்களுக்கும் தகராறுகள் ஏற்பட்டுச் சில சமயங்களில் பெரிய வேலை நிறுத்தங்கள் நடைபெறுகின்றன. வேலை நிறுத்தங்கள் முடிவில் வெற்றி பெறுகிறதா இல்லையா என்பது பற்றி நமக்குக் கவலை இல்லை. பெரிய வேலை நிறுத்தங்கள் ஏற்பட்டால் பொது ஜனங்களுக்கும், சம்பந்தப்பட்டவர்களுக்கும் பலவித அசௌகரியங்களும், கஷ்ட நஷ்டங்களும் ஏற்படுகின்றன. சமீபத்தில் வங்காளத்தில் வங்காள நாகபுரி ரயில்வேயிலும் சணல் ஆலைகளிலும் வேலை நிறுத்தம் ஏற்பட்டதால் எவ்வளவோ கஷ்ட நஷ்டங்கள் உண்டாயின. முக்கிய சர்வீஸ்களிலாயினும் சரி, பிரைவேட் கம்பெனிகள், தனிப்பட்ட நபர்களுடைய ஸ்தாபனங்களிலாயினும் சரி, தொழில் தகராறுகள் ஏற்படுமானால் கட்டாய முறை மத்தியஸ்தம் ஏற்பட்டு அத்தகராறுகளை தீர்க்க வேண்டியது அவசியம். முதலாளிகள் நிலைமையை உணர்ந்து சிறிது தாராள நோக்கத்துடன் நடந்துகொண்டால் இத்தகைய சச்சரவுகளைத் தடுத்துவிடலாம் என்று சிலர் கூறுகின்றனர். அதில் நமக்கு நம்பிக்கையில்லை. சிற்சில சமயங்களில் சுயநலக்காரர்களான தலைவர்களென்போரின் போதனைக்

குட்பட்டுத் தொழிலாளர்களும் தவறு செய்து விடுகின்றனர். ஆகவே முத லாளிகளுக்கும், தொழிலாளர்களுக்கும் தகராறுகள் ஏற்படுமானால் கட்டாய மாக அதில் தலையிட்டு அத்தகராறைத் தீர்க்கக்கூடிய அதிகாரம் சர்க்காருக்கு இருக்க வேண்டும். முதலாளிகளும் தொழிலாளரும் ஆகிய இருதாப்பின ரும் சர்க்காரின் பிரஜைகளே. அவர்களிடையே உண்டாகும் மனஸ்தாபத் தையோ, தகராறுகளையோ சரியான முறையில் தீர்க்க வேண்டியது சர்க்கா ரின் கடமையாகும். அந்தக் கடமையைச் சரிவர நிறைவேற்றுவதற்குரிய சட்ட வசதிகள் சர்க்காருக்கு இருக்கவேண்டும். இத்தகைய பிரேரணை ஒன்று இந்தியா சர்க்காரின் ஆலோசனையில் இருந்துவருவதாகத் தெரிகிறது. சென்ற சில வருஷங்களாக தொழிலாளர் தகராறு சம்பந்தமான பல சட்டங் கள் செய்யப்பட்டிருக்கின்றன வென்றாலும், எவையும் சரியான முறையில் அமலுக்குக் கொண்டுவரப்பட்டிருப்பதாகத் தெரியவில்லை. சட்டமிருந்தால் மட்டும் சர்க்காருக்கும் நிஷ்பட்சபாதமான முறையில் நடந்துகொள்ளவேண்டு மென்னும் மனமும் இருக்கவேண்டும். விட்லி கமிஷன் சிபார்சுப்படி இந்தி யத் தொழிலாளர்கள் பலவித செளகரியங்களையும் அடையக்கூடிய வகையில் சட்டங்கள் இயற்றப்பட்டு அவை கண்டிப்பான முறையில் அனுஷ்டிக்கப்பட வேண்டு மென்பதே நமது மனப்பூர்வமான அபிப்பிராயம். அடிக்கடி சச்சரவு களும் தகராறுகளும் ஏற்படலாகாது.

---

## காங்கிரசும் சிறுபான்மையோரும்

சமீபத்தில் தாமல் கிராமத்தில் ஸ்ரீ. பி. எஸ். குமாரசாமி ராஜா தலைமை யில் கூடிய செங்கற்பட்டு ஜில்லா மகாநாட்டில் நிறைவேற்றப்பட்ட தீர்மா னங்களுள் சிறுபான்மையோர் உரிமைகள் பற்றிச் செய்துள்ள தீர்மானம் மிக முக்கியமானதும் கவனிக்கத்தக்கதுமாகும். "சிறுபான்மையோர் உரிமை களைக் காப்பாற்றித் தேசத்தைச் சரியான முறையில் பரிபாலிக்கும் கடமை யைப் பொது ஜனங்களின் பிரதிநிதிகளாகிய காங்கிரஸ் வாதிகள் சரியான படி செலுத்துவார்கள் என்று இம்மகாநாடு பூரணமாக நம்பி உறுதி கூறுகி றது" என்பது இத்தீர்மானத்தின் வாசகம். சிறுபான்மையோர் என்பது யார்? ஹரிஜனங்களும், முஸ்லிம்களும், கிறிஸ்தவர்களும், சீக்கியர்களுமே யாவர். காங்கிரஸ் எந்த தனிப்பட்ட சமூகத்தினரின் பாத்தியதைக்காகவும் போராடும் ஸ்தாபனமல்ல. இந்தியாவிலுள்ள 36 கோடி மக்களின் பிரதி நிதி ஸ்தாபனமாகவும் இருப்பது காங்கிரஸ். ஆகவே அதில் சேர்ந்து கொள் வது இந்தியர்கள் ஒவ்வொருவருடைய கடமையுமாகும் என்று சுபாஷ்சந்திர போஸ் கூறுகிறார். காங்கிரஸில் சிறுபான்மையோரின் உரிமைகள் ஒரு காலும் பாதிக்கப்படமாட்டா. இதைப் பற்றி அம்மகாநாட்டில் ராஜாஜி பேசுகையில் கூறியது கவனிக்கத்தக்கது. சிறுபான்மையோர் காங்கிரஸை யோ, ஹிந்துக்களையோ நம்பவில்லை யென்று சொல்வதாயின் நாம் மட்டும் பிறுமி மந்திரிகளான ஸ்ரீமான்கள் எம். சி. ராஜா, பன்னீர் செல்வம், கலி புல்லா சாஹிப் ஆகியோரிடம் எப்படி நம்பிக்கைகொள்ள முடியும்? அவர்கள் ஒரு நாளேனும் பதவி வகிக்கலாமா? சிறுபான்மையோர் உள்ளிட்ட தேச மகாஜனங்களின் நன்மைக்காகவே பாடுபடும் காங்கிரஸிடம் அவர்கள் நம்பிக் கை வைக்கவில்லை யென்றால் அது ஒரு சிறிதும் நியாயமாகாது. காங்கிரஸ்

ஒன்றே அனைவருக்கும் ஆதரவு அளிக்கின்றது. காங்கிரஸ் மகாசபையினிடம் நம்பிக்கையுள்ள ஹரிஜனங்களும், முஸ்லிம்களும், கிறிஸ்தவர்களும் இல்லாமல் இல்லை. ஏதோ சில சுயநலக்காரர்கள் தங்கள் வகுப்புகளின் பேரால் சுயநலத்தைச் சாதித்துக்கொள்ள முயற்சிக்கலாம். அதற்கு தேச மகா ஜனங்கள் இடம் தரலாகாது. அனைவரும் ஒற்றுமையுடன் காங்கிரஸ் கொடியின் கீழ் போராடவேண்டும்.

---

## ஜனநாயகக் கட்சியின் புதிய முயற்சி

சென்னை ஜனப்பிரதிநிதி சபைக்குச் சமீபத்தில் தேர்தல் நடைபெற்றபோது இம்மாகாணத்தில் இருந்த கட்சிகள் போதாவென்று பித்தாபுரம் ராஜா ஒரு புதிய கட்சியை ஜனநாயகக் கட்சி என்னும் பேரால் ஸ்தாபித்து லக்ஷக் கணக்கான ரூபாய்களைச் செலவு செய்து காங்கிரசை எதிர்த்துப் பார்த்தார். ஆனால் பாவம்! படுதோல்வி யடையவேண்டியதாயிற்று. மகா ஜனங்கள் அக்கட்சியை ராஜீய அரங்கத்தில் ஏற்ற விரும்பவில்லை. அக்கட்சியினர் கௌரவமாகக் காங்கிரசில் சேர்ந்து தேசத்துக்கும் சமூகத்துக்கும் சேவை செய்யாமல் மீண்டும் மீண்டும் ஏதோ எதிர்ப்பு வேலைகள் செய்வதிலேயே கண்ணாக இருக்கின்றனர். சமீபத்தில் ஜனநாயகக் கட்சியின் நிர்வாகக் கமிட்டி கூட்டம் கூடியபோது காங்கிரசல்லாத அனைவரும் சேர்ந்த ஒருபுதிய கட்சியை ஏற்படுத்த வேண்டும் என்று யோசித்தார்கள். அப்படி ஒரு புதிய கட்சி ஏற்படுமாயின் இவர்களுடைய கட்சியின் கதி என்ன! இது ஒழிய வேண்டியதுதானா? ஜனநாயகக் கட்சிக்கே அந்தப் புதிய கட்சி செய்யக் கூடிய வேலையைச் செய்யும் யோக்கியதை இல்லையா?

---

## செல்வர்களுக்கு ஜவஹர்லால் யோசனை

காங்கிரஸ் தலைவர் பண்டித ஜவஹர்லால் நேரு சமீபத்தில் பர்மாவுக்குச் சென்றிருந்தபோது தனவைசிய சமூகத்தினரான செட்டியார்கள் ஒரு உபசாரம் அளித்தனர். தனவைசியர்கள் பெரிய செல்வர்களல்லவா? பண்டித ஜவஹர்லாலோ தீவிர சமதர்மவாதி. அப்படி யிருந்தும் அவர் தேசத்தின் பிரதிநிதிச் சபையான காங்கிரசின் தலைவர் என்னும் ஹோதாவில் பர்மா சென்றதால் செட்டிமார்களும் தங்கள் அபிப்பிராய பேதத்தையும் மறந்து அவரைப் பூஜித்தார்கள். பண்டிதரும் சாமான்ய மானவரல்ல. எங்கும் மனதாபமில்லாத வகையில் தமது கொள்கையையும் தீவிரமாகப் பிரசாரம் செய்பவர். ஆகவே அவர் பர்மா செட்டிமார்களின் உபசாரத்திற்குப் பதில் அளிக்கையில் தமது பிரசாரத்தையும் கௌரவமாகச் செய்து முடித்தார். அவர்களுக்குச் செய்த உபதேசம் எல்லா செல்வர்களுக்கும் உரியதாகும். பணக்காரர்கள் தங்கள் முதலையே ஒரு சக்தியாகக் கொண்டு அதை சமூகத்துக்குப் பயன்படுத்த வேண்டுமென்றும், காலத்துக்கேற்றவாறு சமாளித்துக் கொண்டு போகும் மனோபாவம் ஏற்படவேண்டு மென்றும், கால சக்கரத்தின் வேகத்தால் ஏற்பட்டுவரும் மாறுதல்களைக் கண்டு அஞ்சாமல் அதை ஏற்று அதற்குத் தக்கபடி தாங்களும் நடந்துகொண்டு தங்கள் சொந்த நலத்துக்கும்,

சமூக நலத்துக்கும் பங்கம் வாாதவாறு காப்பாற்றிக்கொள்ளவேண்டும் என்று கூறினர். இந்த உபதேசத்தை எல்லா செல்வர்களும் கவனித்து நடந்து கொண்டால் தேசத்தில் எத்தகைய வகுப்புப் போராட்டமும் இன்றி சுபீட்சம் ஏற்படும் என்பது நிச்சயம். அப்போது சமதர்மம், பொதுவுடமை என்னும் பிரசாரமும் குறையும். செல்வர்கள் ஏழைகளின் தர்மகர்த்தர்கள்போல் பொறுப்புடன் நடந்துகொண்டால் தேசத்தில் அமைதியும் சமாதானமும் நிலவும்.

---

## காங்கிரசை எதிர்க்கும் சக்திகள்

தேசத்தில் காங்கிரஸ் மகாசபை ஒன்றுதான் மகாஜனங்களின் ஆதரவு பெற்றுச் செல்வாக்குடன் விளங்கிவருகிற தென்பது புதிய அரசியல் முறையின்படி மாகாண சட்ட சபைகளுக்கு நடை பெற்ற தேர்தல்களில் ருஜுவாகிவிட்டது. இதனுல் காங்கிரசில் சேராமல் பற்பல கட்சிகளிலும் தலைவர்களாயும் பிரபலஸ்தர்களாயும் இருந்து வந்தவர்கள் தாங்கள் அடைந்த படு தோல்விக்குப் பரிகாரம் தேட விரும்புகின்றனர். ஜஸ்டிஸ் கட்சியின் தலைவர் பொப்பிலி ராஜாவும், புதுக் கட்சியாகிய ஜனநாயகக் கட்சியின் தலைவரான பித்தாபுரம் மகாராஜாவும் மற்றும் வட இந்தியாவிலுள்ள சர். ஹரிசிங் கோர் போன்றவர்களும் சேர்ந்து ஒரு அகில இந்திய ஸ்தாபனத்தை ஏற்படுத்த உத்தேசித்திருக்கிறார்களாம். பொப்பிலி ராஜா அவர்கள் ஜஸ்டிஸ் கட்சியைக் கலைத்துவிடும் உத்தேசமில்லை யென்று ஒரு அறிக்கையை வெளியிட்டாரே யொழிய இந்தப் பிரஸ்தாபக் கூட்டு முயற்சியை அவரும் மறுக்கவில்லை. இப்போது கால்நடைகள் மகாநாட்டுக்காக சிம்லாவில் கூடிய பற்பல மாகாணங்களையும் சேர்ந்த பிணமி மந்திரிகளும் காங்கிரசின் செல்வாக்கைக் குறைக்க ஒரு அகில இந்திய கட்சியை ஏற்பாடு செய்ய யோசித்து வருவதாகத் தெரிகிறது. அரசாங்கத்தாரும் தங்கள் நிலைமையை மக்களுக்கு விளக்குவதற்காக வெளியிடும் அறிக்கைகளில் காங்கிரஸ் செய்தது தவறு என்று மக்கள் கருதும்படி செய்ய முயற்சிக்கின்றனர். இவ்வாருகக் காங்கிரசை எதிர்த்துப் பல சக்திகள் தீவிரமாக வேலை செய்து வருகின்றன. ஆயினும் இதையெல்லாம் கண்டு காங்கிரஸ்காரர்கள் அஞ்சமாட்டார்களென்பது நிச்சயம். ஏனெனின் மகாஜனங்களின் ஆதரவு பரிபூரணமாகக் காங்கிரசுக்கு இருக்கும் வரையில் இத்தகைய எதிர்ப்புகளை யெலலாம் கண்டு அவர்கள் பயப்பட வேண்டியதில்லை. மகாஜனங்களோ க்ாங்கிரஸ் ஒன்றினுல்தான் தங்களுக்கு விமோசனம் உண்டு என்றும், காங்கிரஸ் தலைவர்கள் எப்போதும் சரியான காரியத்தையே செய்வார்களென்றும் மனப்பூர்வமாக நம்பியிருப்பதால் அதையே ஆதரித்து நிற்பார்களென்பதில் சந்தேகமில்லை. ஆதலின் காங்கிரஸ்காரர்கள் உறுதியாக நின்று தலைவர்களிடம நம்பிக்கை வைத்துப் பொறுமையுடனும், சுயநல மின்றியும் தங்கள் கடமையை ஆற்றுவார்களாயின் காங்கிரசின் செல்வாக்கு எக்காரணத்தைக் கொண்டும் குறையாதென்பது திண்ணம்.

---

தொடர் கதை.

# மாயா விரோதி

(ஸி. எஸ். இராமன், எம். ஏ., எல். டி.)

(881-வது பக்கத் தொடர்ச்சி)

"இங்கு ஒரு பெரிய சண்டை நடந்தது. கைதிகளுக்கும் எங்களுக்கும் நடந்தது. நல்ல வேளையாக நாங்கள் மாயா விரோதியின் மனிதர்களையும் மாயா விரோதியையும் தோற்கடித்து விட்டோம்," என்று முத்தைய செட்டி சொன்னான்.

"நீங்கள் மாயா விரோதியை மட்டும் நன்றாக சங்கிலி போட்டு வைத்திருக்கிறீர்களா?" என்று வடிவாம்பாள் எனும் சீமாட்டி கேட்டாள்.

"மாயா விரோதியை இருப்புச் சங்கிலிகளால் பிணித்து வைத்திருக்கிறோம். நீங்கள் அவனைப் பற்றி பயம் கொள்ள வேண்டாம்" என்று முத்தய்ய செட்டி தனக்குள்ளாகச் சிரித்துக் கொண்டே வெளியில் தைரிய மொழிகளைக் கொடுத்தான்.

அவன் என்னதான் தைரிய வார்த்தைகளைச் சொன்னாலும் புதிதாக வந்தவர்களுடைய அளவிட முடியாத பயம் தீர்ந்த பாடில்லை. தாங்கள் தெரியாமல் கைதிக் கப்பலுள் வந்து சேர்ந்து விட்டதைக் கருதி மனம் நொந்து கொண்டார்கள்.

அன்றிரவு மாயா விரோதி விருந்தினர்களோடும் தனது சகாக்களோடும் உணவு உட்கொள்கையில் மாயா விரோதியைப் பற்றி நல்ல வார்த்தை பல பேசினான். அப்படி சொல்லுகையில் "ஜன சமூகம் முத்தையனைக் குற்றவாளி ஆக்கியது. அவன் உண்மையில் கள்வன் அல்ல. அவனோடு நான் போர் புரிந்து இங்கு சிறையில் அவனை அடைத்திருந்தாலும், அவனைக் கண்டால் எனக்கு ஒரு நல்ல அபிப்பிராயம் உளது. நான் இப்படிக் கூறுவது உங்களுக்கு ஆச்சரியத்தைக் கொடுக்கும். விரோதியின் மீது நல்லபிப்பிராயம் கொண்டுள்ளதைப் பற்றி சில தினங்களுக்கு முன்பு அவனே என்னிடம் தனது சரிதையைக் கூறினான் அதைக் கேட்டது முதல் எனக்கு அவன் மீது கொஞ்சம் கருணை ஏற்பட்டு விட்டது. நீங்கள் ஏன் ஆச்சரியப் படுகிறீர்கள்?" என்றான்.

இராஜமன்னார், முத்துசாமி ஐயங்கார், வடிவாம்பாள் முதலாயினோர் கப்பல் தலைவர் விசித்திரமாகப் பேசுவதைக் கேட்டு ஆச்சரிய மடைந்து, அக் கப்பலை விட்டுச் சென்றால் போதும் எனும் எண்ணத்தோடு இருந்தனர்.

அத்தகைய பயத்தையும் திகிலையும் அடைந்து திரிசங்கு சொர்க்கத்தில் அகப்பட்டுக் கொண்ட அவர்கள் மறுபடியும் கலக்கமும் வேதனையும் அடைந்து எப்படி அக் கப்பலினின்றும் நீங்கிப் போவது என்பதாக

யோசனை செய்தனர். அது முடியாத காரிய மென்று தோற்றியமையால் எதற்கும் தந்திரமாக நடக்க வேண்டும் என்று முடிவு செய்து தத்தம் மனதைத் தேற்றிக் கொண்டனர். முத்துசாமி ஐயங்கார் இழந்து போன தைரியத்தை மறுபடியும் வருவித்துக் கொண்டு, "அவனை நீங்கள் பத்திரமாகக் காவலில் வைத்திருக்கிறீர்களா?" என்று கேட்டார்.

"நீங்கள் ஒருவரும் அஞ்ச வேண்டாம். கைதிகள் யாவரும் பந்தோபஸ்தாக சிறையில் அடைக்கப் பட்டிருக்கின்றார்கள். கொஞ்ச நேரத்திற்குப் பின் நான் உங்கள் எல்லோரையும் கைதிகள் உள்ள இடத்திற்கு அழைத்துப் போகிறேன். இரண்டு தினங்களுக்கு முன்பு மாயாவிரோதிக்கும் எமக்கும் சச்சரவு உண்டாயிற்று. தெய்வாதீனமாக நாம் ஜெயித்தோம்," என்று மாயாவிரோதி கெம்பீரமான தோற்றத்தைக் கொண்ட வண்ணம் சொன்னான்.

அவனுடைய சொற்கள் உல்லாசப் பயணக் கப்பலில் இருந்து வந்தவர்களுக்குக் கொஞ்சம் சமாதானத்தைக் கொடுத்ததால் சந்தோஷம் அடைந்தார்கள். அங்கு வந்திருந்த மூன்று ஸ்திரீகளுள் முதன்மையான எழிலைப் பெற்று ஜாஜ்வல்யமாய் திகழ்ந்து கொண்டிருந்த கோதைநாயகி யம்மாள் முத்தைய செட்டியை நோக்கி, "மாயா விரோதியை மறுபடியும் அறைக்குள் அடைத்த பெருமை தங்களுக்கே உரித்தானது. நான் சென்னை போனதும் இந்த விஷயத்தை எனது புருஷரிடம் சொல்லுகிறேன்," என்று குயில் போல் பேசினாள்.

"தங்களுடைய புருஷர் போலீசில் உத்தியோகமா?" என்று மாயா விரோதி மரியாதையாகக் கேட்டான்.

"ஆம்." என்று தலை யசைத்தாள் கோதை நாயகியம்மாள்.

"சந்தோஷம்," என்று கூறி விட்டு, மாயா விரோதி எல்லோரையும் பார்த்து, "நீங்கள் யாவரும் முதலில் ஆகாரம் உட்கொள்ள வேண்டும். களைப்பும் ஆயாசமும் தீர்ந்து போனால் பயமின்றி நான் சொல்லுவதைக் கேட்கலாம். நீங்கள் தங்குவதற்கு இரண்டு அறைகள் தயார் செய்யப்பட்டிருப்பதால் ஆடவர்கள் ஒரு அறையிலும் ஸ்திரீகள் மற்றொரு அறையிலும் தங்கலாம். ஸ்திரீகளை உபசரிகக காந்திமதி சீமாட்டி இங்கு வந்து அழைத்துப் போவார்கள்" என்று சொன்னான்.

அக் கப்பலில் ஒரு சீமாட்டியும் இருக்கிறாள் என்பதைக் கேட்ட ஸ்திரீகள் மூவரும் அளவற்ற சந்தோஷ மடைந்தனர். சௌந்தர சுந்தரி, கஸ்தூரிபாய், கோதை நாயகியம்மாள் ஆகிய மூன்று சீமாட்டிகளும் மாயா விரோதி குறிப்பிட்ட சீமாட்டியைக் கண்டு பேச ஆவல் கொண்டனர்.

அப்பொழுது அழகே உருக்கொண்டு வந்ததோ என்று ஐயுறத்தக்கபடி விளங்கியவளும காந்திமதி சீமாட்டி என்று சொல்லப் பட்டவளும் ஆன ஒரு இளமடந்தை வந்தாள். அவள் உண்மையில் உயர்குலத்தைச் சேர்ந்த சீமாட்டியல்ல. அவள் கனகன் எனும் பைத்தியம் பிடித்த கள்வனோடு சேர்ந்து ஒரு மனிதனைக் கொலை செய்த குற்றத்திற்காக சர்க்காரால் தண்டனை விதிககப்பட்டு அந்தமானுக்கு அனுப்பப் பட்டாள். அவர்கள் இருவரும் சேர்ந்து கொலை செய்தது சாதாரணக் கொலையல்ல. அவர்கள் இருவரும் அம் மனிதனைக் கயிற்றால் கட்டி விட்டு, தமது பற்களால் அவனைக்

கடித்து, சதையைக் கொஞ்சங் கொஞ்சமாக அகற்றி, நமனுலகு அனுப்பி னைர். கபடச்சிணிகள் என்று நாம் சொல்லி விடலாம். சீமாட்டி சக்று கைதிகளால் கூப்பிடப்பட்டாள். அவள் மாயா விரோதியை மன ோராக் காதலித்திருந்தாள். கனகன் அவளைக் கலியாணம் செய்து கொள்ளா மல் வெறும் காதலியாக வைத்துக் கொள்ள வேண்டு மென்று அபாரமான மனக் கோட்டைகளைக் கட்டிக் கொண்டிருந்தான். சீமாட்டி எனும் அம் மாது இன்றிரவு மிகவும் அலங்காரமாக உடைதரித்து விருந்தாளிகளை கவ னிக்கவே அங்கு தோன்றினள். மேனாட்டு முறைப்படி காந்திமதி சீமாட்டியை கப்பல் அதிகாரி முத்தைய செட்டி உல்லாசக் கப்பலிலிருந்தும் வந்த விருந்தாளிகளுக்கு அறிமுகம் செய்து வைத்தான். இரண்டு மூன்று நிமிஷங்களுக்குப் பின் விருந்தாளிகள் குறிப்பிட்ட இரண்டு அறைகளுக்குப் போனார்கள்.

ஸ்திரீகளைப் பொறுத்த மட்டில் அவர்களுக்குச் சீமாட்டி நல்ல உடை களை எடுத்துக் கொடுத்துப் போட்டுக் கொள்ளுமாறு செய்தாள். கைதி யாக இருந்த அப் பெண்மணிக்கு அத்தனை ஆடைகள் ஏது என்று நீங்கள் கேட்கலாம். "ஜலதூதன்" கப்பலில் சில புதிய துணிமணிகள், சேலைகள் முதலானவை கல்கத்தாவில் இருக்கும் ஒரு பெரிய மனிதருக்கு அனுப்பப் பட்டவை. கப்பல் கைதிகளின் ஆதிக்கத்திற்கு வந்ததும் மேற் கூறிய துணி மணிகளில் ஸ்திரீகளுக்கு வேண்டியன வற்றை மட்டுமே காந்திமதி சீமாட்டி எடுத்து வைத்துக் கொண்டாள். அவற்றுள் சிலவற்றை இப் பொழுது விருந்தாளிகளுக்குக் கொடுத்தாள். கோதை நாயகியம்மாளும் அவளது சிநேகிதைகளும் சீமாட்டியின் உதாரண குணத்திற்கு வியந்து, புகழ்ந்து, அவற்றை உடுத்திக் கொண்டனர். பின்பு சீமாட்டியோடு சாப் பிடும் அறைக்குச் சென்றார்கள்.

அங்கு மாயா விரோதி, விஸ்வநாதன், விநாயக மூர்த்தி, செங்கோட்டை ஜெமீந்தார் இராஜுமன்னார், முத்துசாமி ஐயங்கார் முதலாயினோர் ஸ்திரீகளுக் காக காத்துக் கொண்டிருந்தனர். சிறிது நிமிஷங்களுக்குப் பின் எல்லோ ரும் சந்தோஷமாகவே ஆகாரத்தை உட்கொண்டார்கள். விருந்தாளிகள் முன்பு கொண்டிருந்த பயம் நீங்கியவர்களாய் அறுசுவையோடும் கூடிய உண் டியை நன்கு சாப்பிட்டனர்.

உண்டிக்குப் பின் முத்துசாமி ஐயங்கார் மாயா விரோதியை நோக்கி, "தாங்கள் மாயா விரோதியைப் பற்றிக் கூறுவதாகச் சொன்னீர்களே?" என்று ஞாபக மூட்டினர்.

"ஆம். நான் சொல்லுகிறேன். நீங்கள் யாரும் பயப்பட வேண்டிய தில்லை" என்று அவர்களுக்கு தைரியம் கொடுத்த பின் மாயா விரோதி பின் வருமாறு சொல்லலுற்றான்:—

"உண்மையில் மாயா விரோதியை நான் பார்த்துப் பேசிய வரையில் அவனைப் போல் நல்லவன் யாரும் இல்லை என்று சொல்லுவேன். மிகவும் குணவந்தன்."

இந்த மாதிரி முத்தைய செட்டி பேச ஆரம்பித்ததைக் கேட்ட விருந் தாளிகள் ஆச்சரியம் அடைந்து விட்டனர் வேலியே பயிரைத் தின்ன முற்படு வதுபோல், கப்பலின் அதிகாரியே மாயா விரோதியைப் புகழ்ந்து பேசுவதை

அவர்கள் விரும்ப வில்லை. மாயா விரோதி அவர்கள் மனதில் எண்ணியதை உடனே அறிந்து கொண்டான்.

"நீங்கள் அவனைப் பற்றி வேறு விதமாக நினைக்க மாட்டீர்கள். அவன் நல்லவனே. சமூக விதிகளால் அவன் கைதியாகக் கருதப்படுகிறான். நீங்கள் அவனைப்பற்றி எப்படி வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளலாம். அவன் இப்பொழுது கொடிய தீமைகளைச் செய்தாலும் குணம் மட்டும் மாற வில்லை என்று சத்தியமாகச் சொல்லுவேன். நான் இப்படிப் பேசுவது உங்களுக்கு விரோதமாக இருக்கிறது. அதைப் பற்றி நான் கவலைப்பட வில்லை. அவனையும் அவனது சகாக்களையும் நான் இக் கப்பலில் ஏற்றிக் கொண்டு அந்தமான் போகையில் சச்சரவு—சண்டை—ஏற்பட்டது. தெய்வாதீனமாக நாங்கள் கைதிகளை அடக்க முடிந்தது. இல்லா விட்டால் இப்பொழுது நாங்கள் உங்களுக்கு உதவி புரிந்திருக்க முடியாத நிலைமையில் இருந்திருப்போம்," என்று சொல்லி அவர்களுடைய முகங்களைக் கூர்ந்து நோக்கினான்.

செங்கோட்டை ஜெமீந்தார் முதலாயினோர் மாயா விரோதியைப் பற்றி வேறு விதமாக நினைத்துக் கொண்டிருந்தார்களாதலால் கப்பித்தான் வேறு விதமாக நினைத்ததைப் பற்றி சந்தேகங் கலந்த ஆச்சரியம் அடைந்திருந்தார்கள். உல்லாசமாகக் கடலில் சுற்றிப் புறப்பட்ட அவர்கள் கைதிகள் கப்பலில் சிக்கிக் கொண்டதற்கு வருத்தங் கொண்டிருந்தாலும் கப்பல் அதிகாரி ஆசார உபசாரத்தோடு தங்களை நடத்தியதற்கு சந்தோஷ முகமலர்ச்சி காட்டினர்.

"நீங்கள், சிறிது நேரத்திற்கு முன்பு கைதிகளைக் காண்பிப்பதாகச் சொன்னீர்கள். மாயா விரோதியை நாங்கள் பார்க்க விரும்புகிறோம்," என்று கஸ்தூரிபாய் சொன்னாள்.

"நான் உங்களை எல்லோரையும் அழைத்துச் செல்லுகிறேன்," என்று மாயா விரோதி சொல்லி விட்டு அவர்கள் யாவரையும் அழைத்துச் சென்றான்.

கைதிகள் அடைக்குமிடம் சிறிது வெளிச்சத்தோடு தான் இருந்தது. இரும்புக்கம்பிகளைக் கொண்ட கதவுகள் பெரிய பூட்டுகளால் வெளிப்பக்கம் பூட்டப்பட்டிருந்ததை விருந்தினர் கண்டனர். போர் வீரர்கள் உடையில் மாயா விரோதியின் ஆட்கள் பாரா கொடுப்பதையும் பார்த்தார்கள். ஜெமீந்தார் இராஜமன்னரும் ஏனைய விருந்தாளிகளும் கொஞ்சம் பீதியுடனே அப்பாரிசம் நடந்து போனார்கள். எங்கு மாயா விரோதி திடும்பிரவேசமாகத் தோன்றி துன்புறுத்துவானோ எனும் கொடிய அச்சமும் திகைப்பும் வாட்டி வதைத்து அவர்களை வேதனைக்கடலுள் ஆழ்த்தியதால் அவ்விடத்தை விட்டுச் சடுதியில் சென்று துயில் கொள்ளவேண்டும் எனும் கருத்தைக் கொண்டவர்களாய் கப்பல் அதிகாரி மூத்தைய செட்டியுடன் நடந்து சென்றார்கள். அதே உணர்ச்சிகளை ஸ்திரீகளும் கொண்டிருந்தார்கள். சீமாட்டி அவர்களை தைரியப்படுத்திய வண்ணம் பேசிக்கொண்டிருந்தபடியால் அவர்கள் ஆடவர்களைப்போல் அத்தனை பயத்தைக் கொண்டிருக்கவில்லை.

கைதிகள் இருந்த இடத்திற்கு வெளியில் கொடிகள் தொங்கவிடப்பட்டிருந்தன. ஏதோ ஒரு பெருத்த வைபவம் பொருந்திய பெரிய மனிதர் விஜயத்திற்கு ஏற்பாடு செய்யப்பட் டிருந்ததுபோல் அது காணப்பட்டது. அதைப்பற்றி ஜெமீந்தார் கேள்வி கேட்டமையால் மாயா விரோதி பதில்

கொடுத்தான். கைதிகளுக்கும் கப்பல் அதிகாரிகளுக்கும் யுத்தம் நேர்ந்ததும் அதில் கப்பல் அதிகாரிகள் ஜெயம் பெற்றதும் அதைக் கொண்டாடவே அக் கொடிகள் கட்டப்பட்டனவென்பதும் ஆன பதிலை அவன் கொடுத்தது உல்லாசக்கப்பலில் இருந்தும் வந்த பிரயாணிகளுக்கு சிறிது தைரியத்தைக் கொடுப்பதாக இருந்தது. "மேலும், இன்றிரவு எனது மனிதர்களுக்குத் தமாஷாக இருக்க உத்தரவும் போட்டுளேன். நடனமும் உண்டு," என்று சொன்னான் மாயா விரோதி.

"சந்தோஷம்," என்றார் செங்கோட்டை ஜெமீந்தார்.

"எனது மனிதர்கள் களியாட்டத்திற்கும் நடனத்திற்கும் நீங்கள் விஜயம் செய்யவேண்டும் என்று நான் கேட்டுக்கொள்கிறேன்," என்றான் கப்பித்தான் மாயா விரோதி.

விருந்தாளிகள் எங்ஙனம் முடியாது என்று சொல்லுவது? ஆகட்டும் என்று பதிலளித்தார்கள். மேனாட்டு ஆசாரத்தில் கைதேர்ந்த அவர்கள் நடனத்தில் கலந்து கொள்ளுவதாகச் சொன்னது ஸ்திரீகளுக்கு மிக்க சந்தோஷத்தைக் கொடுப்பதா யிருந்தது. கவலையும் பயமும் கொண்டிருந்த அவர்கள் பொழுது போக்குக்கு வேடிக்கையாக இருக்குமென்று கருதினார்கள்.

கைதிகள் கூண்டிற்குப் போகுமுன் மாயாவிரோதி விஸ்வநாதன் என்பவனை நோக்கி "எல்லாரும் நம்மை எதிர்பார்க்கிறார்களா?" என்று கேட்டான்.

"ஆமாம், கப்பித்தானே," என்று மரியாதையாக கப்பலின் சார்ஜெண்டு விஸ்வநாதன் பதில் கொடுத்தான்.

மாயா விரோதி தனது விருந்தாளிகளை அழைத்துச் சென்றான். எங்கும் அமைதி குடி கொண்டிருந்தது. அதைக்கண்ட விருந்தாளிகள் ஏதும் பேசாமல் கைதிகளின் கூண்டுகளைப் பார்த்தவண்ணம் மெல்ல நடந்தார்கள்.

"துரதிருஷ்டக் காரர்கள்! அவர்கள் கொடுமை அவர்களை இக் கதிக்கு கொண்டு வந்துளது," என்று கோதைநாயகி யம்மாள் மனம் இரங்கி சீமாட்டியிடம் சொன்னாள்.

"அவர்கள் வெகு நன்றாக போஷிக்கப்பட்டு வருகின்றனர்," என்று மாயாவிரோதி மறுமொழி கொடுத்தான்.

இரண்டு நிமிஷங்களுக்குப் பின் மாயாவிரோதி ஒரு கைதியைப் பார்த்து, "கரண்டி முகத்தோனே! என்ன யோசிக்கிறாய்?" என்று கேட்டான்.

"இவனைப்பற்றி என்ன?" என்று கஸ்தூரிபாய் ஆவலோடு கேட்டாள்.

"இவன் மனைவிக்கு ஆபத்து நேர்ந்து இறந்து போனதற்கு வருத்தங் கொண்டிருக்கிறான்," என்று மாயா விரோதி பதிலளித்தான்.

"ஐயோ! அதன் பொருட்டா? என்ன விபத்தோ?" என்று கஸ்தூரிபாய் விசனத்தோடு கேட்டாள்.

"இவன் நன்றாக உருக்கப்பட்ட ஈயத்தை மனைவிமீது ஊற்றினான்," என்று அமைதியான தோற்றத்துடன் சொன்னான் மாயா விரோதி.

"ஐயோ! படுபாவி!" என அவனைக் கடிந்துகொண்டாள் கஸ்தூரிபாய்.

"இவனுடைய விசாரணையைப்பற்றி நான் முன்பு தினசரிகளில் படித்தது இப்பொழுது ஞாபகத்துக்கு வருகிறது," என்று சொன்னார் இராஜமன்னார். அவர்கள் அப்படி வேடிக்கையாகப் பேசிக்கொண்டே பழைய கப்பல் உத்தியோகஸ்தர்களைக் கைதிகள் என்று நினைத்து உதாசீனமாக நடத்திச் செல்லுகையில் உண்மையான கப்பலின் காப்டன் எல்லப்ப செட்டியாருடைய கூண்டை யடைந்தனர்.

"இவன்தான் உலகம் அஞ்சும் கள்வன் மாயாவிரோதி" என்று மாயா விரோதி தனது விருந்தினர்களிடம் கூறினன்.

ஜெமீந்தாரும் அவருடைய நண்பர்களும் ஆச்சரியத்தோடும் திகிலோடும் அறையினுள் உட்கார்ந்திருந்த எல்லப்ப செட்டியாரைக் கண்டனர். அப்பொழுது எல்லப்ப செட்டியார் மிகவும் கோபமான நிலைமையில் இருந்தார். கௌரவமும் கண்ணியமும் வாய்ந்த தன்னை ஒரு பெரிய கைதி என்று மாயா விரோதி கூப்பிட்டது அவருக்கு அடக்க முடியாத கோபத்தையும் மனசஞ்சலத்தையும் கொடுத்தமையால், அவர் என்ன வந்தாலும் வரட்டும்; உண்மையை உரைத்து விடவேண்டும் எனும் கருத்தால் தூண்டப்பட்டார். அவரைப் பார்க்கவந்த ஜனங்களை அவர் பார்த்தார். கைகளில் சங்கிலிகள் பிணிக்கப்பட்டிருந்தாலும் அவற்றை அலட்சியம் செய்வதைப்போன்ற நோக்கத்தோடு நோக்கினர். அப்பொழுது அவருடைய முகம் சிவந்து மங்கலான வெளிச்சத்தில் கோரமாகத் தெரிந்தது. அதைக்கண்டு ஸ்திரீகள் பயங்கொண்டனர்.

இராஜமன்னார் முத்துசாமி ஐயங்காரை கொஞ்சம் ஜாடையாகப் பார்த்துக் கண்ணை சிமிட்டினர். அவரும் கண் அசைதது, மாயா விரோதியைப் பார்த்தார். பின்னர் எல்லப்ப செட்டியாரை நோக்கினர். அதை மாயா விரோதி எளிதில் தெரிந்துகொண்டான்.

"முன்பு எனது படமும் மாயா விரோதியின் படமும் அடுத்தடுத்து தினசரிகளில் போடப்பட்டிருந்ததை நீங்கள் ஞாபகப்படுத்திக் கொள்ளுகிறீர்களா?" என்று முத்தைய செட்டி கேட்டான்.

இராஜமன்னாரும் அவருடைய நண்பரும் "ஆம்" என்றனர்.

அப்பொழுது திடீரென்று எல்லப்ப செட்டியார் எல்லோரையும் நோக்கி, "ஸ்திரீ கனவான்களே! நான் உண்மையில் மாயாவிரோதியல்ல. கப்பல் அதிகாரி எல்லப்ப செட்டியார். கப்பித்தானாக நடிக்கும் இவனே உண்மையான மாயா விரோதி. அக்கிரமமாக என்னையும் ஏனைய கப்பல் அதிகாரிகளையும் இங்கு கைதிகள்போல் அடைத்து வைத்திருக்கிறான்," என்று உரக்கக் கூவினர்.

எதிர்பாராத விதத்தில் பெருத்த சப்தம் போட்டது ஏனைய கைதிகளைப்போல் நடத்தப்பட்டவர்களுக்கு சக்தி கொடுத்ததுபோல் இருந்தது. எல்லப்ப செட்டியாரைப்போல் எல்லோரும மாயா விரோதியைப்பற்றி புகார் செய்தார்கள். பல குரல்கள் எல்லப்ப செட்டியார் கூறியதை ஆமோதித்துச் சொன்னது விருந்தினர்களுக்கு ஆச்சரியத்தையும் திகிலையும் கொடுத்துவிட்டதால் அவர்கள் முத்தைய செட்டியின் முகத்தை நோக்கினர்கள்.

(தொடரும்.)

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

ஈசுவர௵ ஆனிமீ—கலியுகாதி 5039, சாலிவாகனம் 1860,
பசலி 1346-47, கொல்லமாண்டு 1112, ஹிஜரி 1356,
இங்கிலீஷ் 1937௵ ஜூன்மீ—ஜூலைமீ

| ஆனிமீ | ஜூன்மீ | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 14 | திங் | சஷ்16-18 | மக22-43 | ம22-43அ | மிதுன ரவி நா-20-23 |
| 2 | 15 | செவ் | சப்16-20 | பூர24-45 | சி24-45அ | வியாதியஸ்தர் குளிக்க |
| 3 | 16 | புதன் | அஷ்18-18 | உத்28-38 | அ28-38ம | தானியம் செலவிட [க |
| 4 | 17 | வியா | நவ21-55 | அஸ்34-8 | சித்60 | மருந்துண்ண; கோடியுடுக் |
| 5 | 18 | வெள் | தச26-55 | சித்40-43 | சித்60 | தசஹார விரதம் |
| 6 | 19 | சனி | ஏகா32-50 | சுவா48-8 | அ48-8சி | சர்வ, மத்வ ஏகாதசி |
| 7 | 20 | ஞா | துவா39-5 | விசா55-53 | மர60 | இராம லக்ஷ்மண துவாதசி |
| 8 | 21 | திங் | திர45-28 | அனு60 | சித்60 | சுப முகூர்த்தம் செய்ய |
| 9 | 22 | செவ் | சது51-25 | அனு3-35 | சி3-35மர | குளம் கிணறு வெட்ட |
| 10 | 23 | புத | ○56-48 | கே10-53 | சி10-53மர | பௌர்ணமி, ரிஷப பூஜை |
| 11 | 24 | வியா | பிர60 | மூல17-18 | சித்60 | |
| 12 | 25 | வெள் | பிர1-5 | பூரா23-0 | பிர23-0சி | |
| 13 | 26 | சனி | துதி4-33 | உத்27-35 | சித்60 | |
| 14 | 27 | ஞா | திரி6-45 | திரு31-3 | அ31-3மர | |
| 15 | 28 | திங் | சது7-50 | அவி33-23 | சித்60 | |
| 16 | 29 | செவ் | பஞ்7-38 | சத34-25 | மர60 | |
| 17 | 30 | புத | சஷ்6-13 | பூர34-13 | அ34-13சி | |
| 18 | 1 | வியா | சப்3-35<br>அஷ்59-40 | உத்32-48 | சித்60 | |
| 19 | 2 | வெள் | நவ54-25 | ரே30-8 | அமி60 | |
| 20 | 1937௵ ஜூலைமீ 3 | சனி | தச48-15 | அஸ்26-28 | சித்60 | தானியஞ் செலவிட |
| 21 | 4 | ஞா | ஏகா41-10 | ப✻21-43 | சித்60 | கிருத்திகை, சர்வ, மத்வ ஏகா |
| 22 | 5 | திங் | து33-23 | கிரு16-23 | ம16-23அ | கூர்ம துவ தசி [தசி |
| 23 | 6 | செவ் | திர25-30 | ரோ10-28 | அ10-28சி | பிரதோஷம், மாச சிவராத் |
| 24 | 7 | புதன் | ச●17-30 | மிரு4-25<br>திரு58-30 | சித்60 | சர்வத்திர அமாவாசை, அவ மாகம் |
| 25 | 8 | வியா | அமா9-40 | புன53-18 | அமி60 | கிருஷியாரம்பம் செய்ய |
| 26 | 9 | வெள் | பிர2-28<br>துதி56-18 | பூச49-0 | மர60 | ஆஷாடசுத்தம், சந்திர தெரிசனம், ரதயாத்ராதுதியா |
| 27 | 10 | சனி | திரி51-40 | ஆயி46-5 | மர46-5அ | நவக்கிரகசாந்தி செய்ய |
| 28 | 11 | ஞா | சது48-38 | மக44-50 | மர44-50சி | மாசசதுர்த்தி விரதம் |
| 29 | 12 | திங் | பஞ்47-33 | பூர45-23 | சித்60 | ஸ்கந்தபஞ்சமி, மாடுவாங்க |
| 30 | 13 | செவ் | சஷ்48-20 | உத்47-48 | அ47-48சி | சஷ்டி, ஆனித்திருமஞ்சனம் |
| 31 | 14 | புத | சப்51-5 | அஸ்52-15 | மர52-15சி | விஸ்வத் சப்தமி |
| 32 | 15 | வியா | அஷ்55-28 | சித்58-18 | சித்58-8அ | கடக ரவி நா-47-28 |

| | | | |
|---|---|---|---|
| சனி | சுக் | புத கே | சூரி |
| — | 14-மிது-புத<br>17-ரிஷ-சுக்<br>28-கன-புத<br>28-தனு-குரு | | — |
| குரு | | | |
| | ராகு | செ | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,
AT THE "ANANDA BODHINI" PRESS,
No. 6, LAWYER CHINNATHAMBI MUDALI STREET, MADRAS.